குமரன்
ஆரம் 20, முத்து 10
October 22, 1942

Record no. 313

*Kumaraṉ*

*Āram 20, muttu 10*

*October 22, 1942*

Record no. 313

REGD. NO. M. 1823.　　10 பக்கங்கள்.　　விலை 0—1—6

# குமரன்

சந்தா விவரம்
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 7-0-0

விளம்பரம்.
நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும்　　மாதப் பதிப்பும் சேர்ந்தது.　　PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 20 | காரைக்குடி சித்திரபானு-ஹு ஐப்பசி-மீ 6-உ (22—10—42) | முத்து 10

## "யுத்தம் முடிந்ததும் சுதந்திரம் பெறுவது நிச்சயம்"

### "ஜப்பானுக்கு இடங் கொடுக்கக் கூடாது"

### பெரிய பாதிரியார் தலைமையில் ராஜாஜி பிரசங்கம்

★

அக்டோபர் 15உ மாலை கல்கத்தா கிராண்டு ஹோட்டலில், இந்தியாவின் பெரிய பாதிரியார் தலைமையில் ஸ்ரீமான் ஸி.ராஜகோபாலாச்சாரியார் நிகழ்த்திய பிரசங்கத்தில், இந்திய விஷயத்தில் கல்லாக இருக்கும் பிரிட்டிஷார் மனம் நிச்சயமாகக் கரையுமென்று தாம் நம்புவதாயும், ஆனால் ஒரே முகமாக நின்று தன்னுடைய கோரிக்கையை வற்புறுத்த வேண்டுமென்றும் குறிப்பிட்டார். இப்போது நாட்டில் நடந்து வரும் நாசவேலையை அவர் பலமாகக் கண்டித்து, இதனால் இந்தியாவின் லட்சியம் சித்திக்காதென்றும், இந்தியாவின் எதிர்காலம் அபிவிருத்தியுறாதென்றும், எந்த அம்சத்தில் பார்த்தாலும் இது மிகவும் அபாயமானதென்றும், ஒன்றும் செய்ய முடியாவிட்டால் சும்மா இருப்பதே மேலென்றும், அதற்காகத் தவறான காரியத்தைச் செய்யவேண்டாமென்றும் கூறினார். அவர் மேலும் பேசியதாவது:—

நாட்டின் சுதந்திரத்தைப் பெறுவதற்காக "உண்மையான முறையில் நடந்துவரும் முயற்சிகளை" எதிர்ப்பதாலும்," சுதந்திரத்துக்காக நடந்து வரும் தேசியத் திட்ட"த்தைக் கண்டிப்பதாலும் மக்களுடைய அப்பிரீதிக்கு நான் ஆளாகக் கூடுமென்பது எனக்குத் தெரியும். எனினும், இறுதியில் எல்லாம் நன்மையாக முடியுமென்பதே எனது திடமான நம்பிக்கை. இந்த யுத்தம் முடிந்ததற்குப் பிறகு, பிரிட்டிஷார் நம்மை அடிமைகளாக வைத்திருக்கமுடியாது. இதுவே எனது நம்பிக்கை. இதையும் பிரிட்டனிடம் நம்பிக்கை கொள்ளும் பிரச்னையையும் குழப்பாதீர்கள். பிரிட்டிஷார் நமது நம்பிக்கைக்குப் பாத்திரர்களாக இருந்தாலும், இல்லாவிட்டாலும், நாம் சுதந்திர மக்களாக இருப்பது மட்டும் நிச்சயம். பிரிட்டிஷாரே மனமுவந்து சுதந்திரம் கொடுத்தாலும் சரி; வேண்டா வெறுப்பாகக் கொடுத்தாலும் சரி அதைப்பற்றி அக்கரையில்லை. இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்கக் கூடாதென்று கங்கணம் கட்டிக் கொண்டிருப்பவர்களின் ஆதிக்கத்திற்குப் பிரிட்டன் உட்பட்டிருந்தாலுங்கூட, யுத்தம் முடிந்ததும் இந்தியா நிச்சயமாகச் சுதந்திர நாடாக இருக்கும்.

இனி யுத்தம் அதிக காலத்துக்கு நடக்காது. நமது சுதந்திர லட்சியத்துக்காக நெடுங்காலம் பொறுத்திருந்து விட்டோம். இன்னும் இரண்டு வருஷ காலம் நாம் பொறுக்கக் கூடாதா? அதற்கிடையே, நம்முடைய காரியத்தைக் கெடுக்கக் கூடிய வகையில் நாசவேலையில் இறங்காமலிருக்க முடியாதா?

நம்முடைய தேசத்தை இழந்துவிட்டு, ஜப்பானியர் வசம் சிக்கினால், நம்முடைய சுதந்திரத்துக்காக நாம் மேலும் நூறு வருஷகாலம் காத்திருக்க வேண்டியிருக்கும். ஜப்பானியர் நம்மீது ஆதிக்கம் செலுத்த நாம் இடங்கொடுக்கக் கூடாது. இப்போது இந்தியாவில் சிலர் செய்து வரும் காரியங்கள் ஜப்பானை இங்கு அழைப்பதாகவே இருக்கின்றன. இத்தகைய காரியங்கள் நடக்க வேண்டுமென்பது தான் ஜப்பானின் விருப்பமும். இந்த நாசவேலையால் ஒரு நன்மையும் கிடைக்காது.

நேச நாடுகளின் நாகரிகமும் கலையும் அச்சு நாடுகளுடையவற்றைக் காட்டிலும் உயர்வானவை. அச்சுநாடுகளின் கட்சியைவிட, பிரிட்டிஷ், ஐக்கிய நாடுகளின் கட்சியே மேலானதென்று பரிபூரணக் காங்கிரஸ் வாதிகள் பலமுறை சொல்லியிருக்கிறார்கள், ஒப்புக்கொண்டுமிருக்கிறார்கள்.

பிரிட்டிஷாருடன் நாம் கோபங் கொள்ளக் காரணம் எதுவாயிருப்பினும், நாம் அவர்கட்கு உதவ வேண்டுமே ஒழிய, அச்சு நாடுகளுக்கு உதவக் கூடாது. இறுதிவெற்றி நேசநாடுகளுக்குத் தான் என்பதே எனது நம்பிக்கை. இப்பொழுது எதிரியின் பலம் அதிகமாக இருக்கலாம்; ஆனால், எதிரியின் பலத்தைச் சிறிது சிறிதாக க்ஷீணப்படுத்த, நேச நாடுகளுக்கிருக்கும் வசதிகள் அனேகம். இரண்டு தீங்கில் எது குறைவானதோ அதையே இந்தியா ஏற்றுக் கொள்ள வேண்டும். அச்சு நாடுகளுக்கு உதவும் வகையில் இந்தியா இப்போது ஒன்றும் செய்யக் கூடாது.

காங்கிரஸ் தேசத்தைப் பாதுகாக்க விரும்பியது; அதற்கான பாதுகாப்புப் பொறுப்பில் பங்கு வேண்டுமென்றது. சர்க்கார் காங்கிரஸ் மீது சந்தேகங் கொண்டு பொறுப்பைக் கொடுக்கவில்லை. அலட்சிய புத்தியுடனிருக்கும் பொது மக்களின் மனோபாவத்தை மாற்றி, சர்க்காரின் ராணுவ ஏற்பாடுகளுக்கும் தேச மக்களுக்குமிடையே நெருங்கிய தொடர்பை உண்டு பண்ணக் காங்கிரஸ் அதிகாரத்தைக் கேட்டது. இந்திய மக்களின் மனோபாவத்தை சர்க்கார் அறியவில்லை. காங்கிரஸ் கோரியதையெல்லாம் மறுத்தனர். நம்முடைய கோரிக்கைக்குப் பிரிட்டன் இணங்காவிட்டாலும், நாம் தவறான காரியத்தைச் செய்ய முடியாது.

பிரிட்டன் உங்களை நம்பாவிட்டாலுங்கூட கொஞ்சகாலத்திற்கு நீங்கள் பிரிட்டனிடம் நம்பிக்கை வையுங்கள். நம்மை நாம் காத்துக்கொள்வதற்கு இது அவசியமாகும்.

(10-ம் பக்கம் பார்க்க)

## ரிஜிஸ்டர்ட் இந்திய வைத்தியர்

### பட்டத்தை உபயோகிக்க அனுமதி

இந்திய வைத்திய மத்திய போர்டினால் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டாக்டர்கள் "ரிஜிஸ்டர்ட் இந்திய வைத்தியர்" என்ற பட்டத்தை உபயோகிக்கலாகாது என்பது சம்பந்தமாகச் சென்னை சர்க்கார் பொது ஜன அபிப்பிராயம் கோரியதன்பயனக இப்போது மேற்படி பட்டத்தை உபயோகிக்கலாகாதென்ற பிறப்பிக்கப்பட விருத்தத்தைச் சென்னை சர்க்கார் கைவிட்டு விட்டதாகத் தெரிகிறது.

## யுத்தத்தினால் இறக்கும் சிவில் பிரஜைகளுக்கு ஞாபகார்த்தப் பதிவு

இந்தியாவில் எதிரித் தாக்குதலுக்கு இரையாகும் பிரஜைகளின் பெயர்களை சாம்ராஜ்ய யுத்த மரணக் கமிஷன் ஞாபகார்த்தமாகப் பதிவு செய்வதற்கு ஏற்பாடாகியிருக்கிறது. சென்ற மகா யுத்தத்தின்போது பிரிட்டனில் ஸ்தாபிக்கப்பட்ட இக்கமிஷன் அப்போது போரில் உயிர் கொடுத்த மன்னர் படையினரது பெயர்களை மட்டுமே பதிவு செய்து வைத்தது. இப்போது போராட்டத்தில் ஈடுபடாத சாதாரண பிரஜைகளும் இறந்து வருவதால் அவர்கள் பெயர்களையும் பதிவு செய்து வைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இந்தியா விஷயத்தில் பிரிட்டிஷ் இந்தியாவிலோ சமஸ்தானங்களிலோ உள்ள பிரிட்டிஷ், பிரிட்டிஷ் இந்திய, இந்திய மக்களில் எல்லா வகையினர் விஷயத்திலும் மட்டுமன்றி இந்தியாவுக்கு வெளியே வசித்துவரும் பிரிட்டிஷ் இந்தியர்கள், இந்தியர்கள் ஆகியோர் விஷயத்திலும் ஷை கமிஷன் இந்த வேலையைச் செய்துவரும். மாகாண கவர்ன்மெண்டுகள் முதலியவர்களோடு கலந்தாலோசித்ததின் பயனாய் இந்தப் பதிவுகளை மாகாணவாரியாய் அமைத்து டிவிஷன்கள், ஜில்லாக்கள், ஸப் டிவிஷன்கள், நகரங்கள், கிராமங்கள் வாரியாய்ப் பிரித்துக் காட்டுவதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஐக்கிய ராஜ்யத்தில் 1. பெயர், 2. கிலையான வீட்டு விலாசம், 3. பட்டம், விருது முதலியன, 4. ஊழியம், ஊழிய நம்பர், அந்தஸ்து அல்லது உத்தியோகம் (இது சிவில் தற்காப்பு ஊழியர்களுக்கு மட்டும்) 5. ஆணு பெண்ணு என்பது, 6 வயது, 7 (இன்னொருடைய—பெயரும் விலாசமும்) மகனு மகளா என்பதும் கணவனு மனைவியா என்பதும் (விரும்பினால் இங்கே குடும்ப விவரங்களும் தரலாம்), 8 எந்தத் தேசத்தாரென்பது, 9 இறந்த தேதியும் இடமும், 10 மரணம் விளைந்த சம்பவம், 11 மரணம் விளைந்த சம்பவம் நடந்த இடம், 12 புதைக்கப்பட்ட இடம், 13 விரும்பினால் இதர விவரங்கள் ஆகிய இவை பதிவு செய்யப்படுகின்றன.

இந்தியர்கள் விஷயத்திலும் இவைகளெல்லாம் பதிவு செய்யப்படவேண்டுமென்றும், இவற்றோடு 2வது இனத்துக்குப் பின் மதம், ஜாதி அல்லது பிரிவு என்பதையும் 12வது இனத்தில் "அல்லது தகனம் செய்யப்பட்ட" என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

### பொதுஜனங்களுக்கு வேண்டுகோள்

முக்கியமாக இந்தியா கவர்ன்மெண்டின் ஆதிக்கத்துக்குட்பட்ட பிரதேசங்களுக்கு வெளியே யுத்தத்தினலேற்படும் காயங் காரணமாய் இறக்கும் அல்லது இறந்திருக்கக் கூடிய இந்தியப் பிரஜைகள் விஷயமாய் பொதுஜனங்களின் ஒத்துழைப்பு கோரப்படுகிறது. உதாரணமாகத்தற்போது இந்தியாவிலுள்ளவர்களுக்கு பர்மாவில் யுத்தத்தினலிறந்து போன இந்தியப் பிரஜைகளைப் பற்றித் தகவல் தெரிந்திருக்கலாம். இத்தகைய தகவல்கள் தெரிந்துள்ளவர்கள் உள்ளூர் அதிகாரிகளுக்குத் தெரிவிக்கவேண்டும். அப்படிச் செய்தால் அவசியமான தகவல்களை சிவில் தரகாப்பிலாகா மூலமும் லண்டனிலுள்ள இந்தியா ஹைகமிஷனர் மூலமும் ஷை கமிஷனுக்கு அனுப்ப ஹேதுவாயிருக்கும்.

### ரேடியோ லைசென்ஸுகள் ரத்து

எதிரி ரேடியோச் செய்திகளைக் கேட்டதற்காக ஜான்ஸியில் 9 பேர்களின் லைசன்கள் ரத்து செய்யப்பட்டன.

## பொது ஜனங்களும் காக்கி உடுப்பும்

### சென்னை சர்க்கார் அறிக்கை

பொது ஜனங்கள் காக்கி உடை அணிவது பற்றிச் சென்னை சர்க்கார் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கின்றனர்:—

பொது ஜனங்கள் காக்கி உடுப்புகள் அணிவதால், மாறுவேஷத்துடன் சென்று கொண்டிருக்கும் எதிரிகளைக் கண்டு பிடிப்பதில் கஷ்டமேற்படுகிறது என ராணுவ அதிகாரிகள் சர்க்காருக்குத் தெரிவித்திருப்பதால் பொது ஜனங்கள் ராணுவ சிப்பாய்கள் உடைக்குச் சமமான காக்கி உடைகள் ஒன்றும் அணியக்கூடாது. காக்கிக் கால் சட்டைகள் அவசியமாக அணிய வேண்டுமென்றால் வெள்ளை அல்லது வேறு கிறமுள்ள மேல் சட்டைகள் அணிவது நலம். போலீஸ், கலால் இலாகாக்களைச் சேர்ந்தவர்களையும், காக்கி உடுப்புகளை ஒழுங்கு முறையாக அணியும் பள்ளிக்கூட மாணவர்களையும் இது பாதிக்காது.

## பயோடின் என்னும் வைடமின் சத்து

கார்னல் சர்வகலாசாலையைச் சேர்ந்த, ப்ரபஸர் வின்ஸன்ட் டு விக்னேட் என்பவர், வைட்டமின்களிலெல்லாம் சக்திவாய்ந்த இயற்கை வைட்டமினை பயோடினின் ரசாயன அமைப்பு நுட்பத்தைக் கண்டு பிடித்திருப்பதாக அமெரிக்க ரசாயன சங்கம் அறிவிக்கிறது. கலப்பில்லாத பயோடின் கிடைப்பது அரிதாகையால் அதைச் செயற்கையாய் உற்பத்தி செய்வதற்கு இது மிகச் சாதகமாக இருக்குமென்று நம்பப்படுகிறது. உலகம் முழுவதிலுமே ஒரு அவுன்ஸில் பத்தில் ஒரு பாகம் பயோடின் தான் இப்பொழுது இருக்கிறது. ப்ரபஸர் டு விக்னேட் பயோடினைக் கட்டி ரூபத்தில் கண்டுபிடித்திருப்பது தற்கால விஞ்ஞான சாஸ்திர சரித்திரத்திலேயே மிக முக்கியம் வாய்ந்ததென்று பிரபல விஞ்ஞானிகள் கருதுகின்றனர். 32 பரமாணுக்கள் அடங்கியுள்ள பயோடின் ஜீவாணு ஒரு ஸெண்டிமீடரில் லட்சத்தில் ஒரு பங்கு நீளந்தானிருக்கிறது. இந்த 32 அணுக்களில் 10 கரிச் சத்து; 16 ஜலவாயு; 3 பிராணவாயு; இரண்டு நைட்ரஜன்; ஒன்று கந்தகம். மனிதர்கள் உள்பட சகல ஜீவராசிகளின் வாழ்க்கைக்கும் பயோடின் மிகவும் அவசியம் என்று தெரிகிறது. பயோடின் இல்லாமல் இவ்வுலகத்தில் ஜீவன்கள் பிறக்கவே இருக்க முடியாது என வாஷிங்டன் செய்தி கூறுகிறது.

## டாக்டர் சுப்பராயன் ரஷ்யா போகவில்லை

இந்தியாவிலிருந்து ரஷ்யா செல்லப் போகும் நல்லெண்ண தூதுகோஷ்டியில் டாக்டர் பி. சுப்பராயன் பெயரும் சேர்க்கப் பட்டிருந்தது. இந்நாட்டில் வேலையிருப்பதால், தாம் ரஷ்யா போகவில்லையென அவர் தெரிவித்திருக்கிறார்.

## சோவியத் இளைஞர்களின் ஒப்பற்ற சேவை

(மாஸ்கோ நிருபர் எழுதுவது)

யுத்தம் ஆரம்பித்தது முதல் சோவியத் மாணவர்கள் விடா முயற்சியுடன் தீவிரமாக வேலை செய்து வருகிறார்களென்றும், இந்த வருஷம் சோவியத் கல்லூரிகளிலிருந்து மொத்தம் 17,350 எஞ்சினீர்களும், 14,500 டாக்டர்களும் 6,900 ரயில், ரஸ்தா நிபுணர்களும், 7000 கிராம அபிவிருத்தி நிபுணர்களும் 25,000 உபாத்தியாயர்களும் பட்டம் பெறுகின்றனர் என்றும் அகில யூனியன் பள்ளிக்கூடக் கமிட்டித் தலைவர் எஸ். வி. காவ்டனேவ் கூறுகிறார். இப்பொழுது நாஜிகளின் ஆதிக்கத்திலிருக்கும் நகரங்களில் இருந்த பல்கலைக் கழகங்களும், பள்ளிகளும், ரஷ்யாவின் கிழக்குப் பாகத்துக்கு மாற்றப்பட்டு அங்கு வேலை செய்து வருகின்றன. உயர்தர பாடசாலைகளின் பாடத் திட்டங்களும் நாட்டின் யுத்த முயற்சிகளில் அதிகம் பங்கெடுத்துக் கொள்ளும் வகையில் மாற்றி யமைக்கப்பட்டிருக்கின்றன.

வைத்திய மாணவர்களுக்குப் போர்க்கள சிகிச்சையிலும், எஞ்சினீரிங் மாணவர்களுக்கு அரண்கள் கோட்டை கொத்தளங்கள் நிர்மிக்கும் வேலைகளிலும், போக்குவரத்து அமைப்பாளர்களுக்கு, ரயில் பாலங்களையும் தண்டவாளங்களையும் திரும்ப அமைப்பதிலும் விசேஷமாகப் பாடங்கள் போதிக்கப்படுகின்றன. எல்லா மாணவர்களுக்கும் ராணுவப் பயிற்சியும், ஆயுதப் பயிற்சியும் அளிக்கப்படுகின்றன.

பாடங்களைப் பயிலும் பொழுதே ஆராய்ச்சி ஸ்தலங்களில் யுத்தத்துக்கு அவசியமான சில பொருள்களை இவர்கள் உற்பத்தி செய்கின்றனர். ஜார்ஜியா மாகாண விவசாயப் பள்ளிக்கூடமொன்றில், விவசாயக் கருவிகள் பழுது பார்ப்பதும், யந்திரங்களின் தனிப்பாகங்கள் உற்பத்தியும் நடந்து வருகின்றன. நாடு பூராவும் விளைச்சலை அதிகப்படுத்துவதில் மாணவர்கள் விவசாயிகளுக்கு உதவியளித்து வருகின்றனர்.

ராணுவ ஆஸ்பத்திரிகளுக்குச் சென்று இவர்கள் அதிகாரிகளுக்கு உதவியும் வியாதியஸ்தர்களுக்கு தமாஷாக்களும் அளிக்கின்றனர். மாணவிகள் நர்ஸ்களாகப் பயிற்சி பெற்று ராணுவ ஆஸ்பத்திரிகளிலும், ஆம்புலன்ஸ் படையிலும் சேர்ந்திருக்கின்றனர். 'எங்கள் இளைஞர்களை யுத்தம் அதிகத் திடப்படுத்திவிட்டது; கல்வி அறிவின் சிகரத்தை நோக்கி அவர்கள் விடாப்பிடியாக ஏறிச் செல்கின்றனர். அதே சமயத்தில் யுத்த முயற்சியிலும் தீவிரமாக ஈடுபட்டிருக்கின்றனர்' என்று மி. காவ்டனேவ் சொல்லி முடித்தார்.

## தவிடு போக்கத் தடை

அரிசியிலிருந்து 25 சதமான அளவுக்கு அதிகமாகத் தவிட்டைப் போக்கும் முறையில் தீட்டக் கூடாதென்று திருவிதாங்கூர் சர்க்கார் மைஸ்மில் நிர்வாகிகளுக்குத் தடை விதித்திருக்கின்றனர்.



## விளம்பரம்

கூத்தலூரிலிருக்கும் லேட் O. P. சிவத்தியா பிள்ளை என்ற சின்னச்சாமி பிள்ளை சம்சாரம் சௌரியம்மாள் இதனால் சகலமானவர்களுக்கும் அறிவிப்பதென்னவென்றால் கூத்தலூர் O. P. சிவத்தியா பிள்ளை என்ற சின்னச்சாமி பிள்ளை இறந்துபோய் அவருடைய மூத்த தாரங்களின் மக்கள் எனக்கும் என் மக்கள்களுக்கும் உள்ள பாத்தியதையை மோசம் செய்யும் பொருட்டு ஏதேனும் கிரயம், ஒத்தி, அடமானம் முதலிய பந்தகங்கள் ஏதேனும் இறந்தவருடைய சொத்துக்களைப் பொருத்து செய்தால் அவைகள் என்னுடையவும் என்னுடைய மக்களுடையவும் பாத்தியதையைக் கட்டுப்படுத்தாதென்றும் அவைகள் செல்லாதென்றும் இதன் மூலம் அறிவித்திருக்கிறேன்.

கூத்தலூர் O. P. சிவத்தியா பிள்ளை என்ற சின்னச்சாமி பிள்ளை சம்சாரம்

சௌரியம்மாள்.

15—10—42.

## நோட்டீஸ்

### தேவகோட்டை சப் கோர்ட்டு

1934ளு O. S. No. 137

1942ளு I. A. No. 543

கா. ப. நாகூர்கன்னி ராவுத்தர் } மனுதார்.

முகம்மது அப்துல் காதர் } வாதி 1வது எதிர்மனுதார்.

ஷை 1வது எதிர்மனுதாருக்கு தெரிவிப்பதென்னவென்றால்;—

தாங்கள் வாதியாயிருந்து தாக்கல் செய்த பிறுதில் யேற்பட்ட பிரிலிமினரி டிக்கிரியில் கண்ட சொத்துக்களை கமிஷனர் நியமித்து பிரிவினை செய்து பைனல் டிக்கிரி பிறப்பிவிக்க வேணுமாய் மனுதார் ஷை மனு தாக்கல் செய்து தங்களுக்கு நோட்டீசுக்கு உத்திரவாகி 2-11-1942உ வாயிதா யேற்பட்டிருப்பதில் யேதும் ஆக்ஷேபணையிருந்தால் ஷை தேதி பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளாவிடில் ஒருதலைப் பக்ஷமாக தீர்மானிக்கப்படும் என்பதை அறியவும்.

P. S. கிருஷ்ணசாமி அய்யர்,

தேவகோட்டை, 13—10—42. } மனுதார் வக்கீல்

## சினிமாப் பத்திரிகைகள்

சினிமாப் பத்திரிகைகள் புதிது புதிதாகத் தோன்றி மறைவது பட முதலாளிகளுக்கு கஷ்ட முண்டுபண்ணுவதால், இனி குறைந்தது 2,000 பிரதிகளுக்காவது ஆடிட்டர் ஸர்டிபிகட் வாங்கிக் கொடுக்கும் பத்திரிகைகளுக்குத்தான் விளம்பரம் கொடுப்பது என்று பம்பாயிலிருக்கும் பட முதலாளிகள்—விநியோகஸ்தர்கள் சங்கம் தீர்மானித்திருக்கிறது.

### கதைக்கு ரூ. 10,000

பிரபாத் கம்பெனியார் "பத்து மணி" என்ற கதையை, ஸினேரியோ, வசனம் இவற்றுடன் அதன் ஆசிரியர் ஸ்ரீ பி. கே. ஆத்ரேயிடமிருந்து ரூ. 10,000 விலை கொடுத்து வாங்கினர்களாம்.



## 29 பெண்மணிகள்மீது வழக்கு

புது டில்லியிலுள்ள மதன்மோகன் ஸ்திரீகள் கைத்தொழில் பாடசாலையைச் சேர்ந்த தலைவியும் மற்றும் 28 பெண்களும் தடை உத்தரவை மீறி ஊர்வலம் நடத்தியதாகக் குற்றம் சாட்டப்பட்ட வழக்கில், 12 மைனர் பெண்கள், இறந்தவர்களுக்காக நடந்த துக்க ஊர்வலத்திலேயே தாங்கள் கலந்து கொண்டதாயும், அதற்கு விலக்குண்டென்றும் கூறினர். தான் ஊர்வலத்தில் கலந்து கொண்டது உண்மையென்றும், தன்னைக் கைது செய்யப் போலீஸார் கூட்டமாக வந்தது சட்ட விரோதமென்றும் மற்றொரு பெண் குறிப்பிட்டார். விசாரணை ஒத்திப் போடப்பட்டது.

### பெண்கள் கூட்டத்தில் தடியடி

ஸ்ரீ மகாதேவ தேசாய் காலஞ் சென்று இரண்டு மாதங்களானதை முன்னிட்டு அக்டோபர் 15உ மாலை பம்பாய், குவாலியர் குளக்கரை மைதானத்தில் நடைபெற்ற பெண்கள் கூட்டத்தைப் போலீசார் கழிகொண்டு தாக்கியதால் 10 பேர் காயமுற்றனர்.

### ஸ்திரீகளுக்குத் தண்டனை

ஊர்வலம் நடத்தியதற்காக ஸ்ரீ அச்சுத பட்டவர்த்தனின் தாயார் ஸ்ரீமதி யமுனுபாய் பட்டவர்த்தனுக்கும், ஸ்ரீமதி பலேராவுக்கும் தலா 200 ரூபா அபராதம் அல்லது 6 மாதக் காவல் விதிக்கப்பட்டது என ஆமத் நகரச் செய்தி கூறுகிறது. வேறு மூன்று ஸ்திரீகளுக்கு அதே குற்றத்திற்காகத் தலா 50 ரூபா அபராதம் அல்லது 3 மாத வெறுங்காவல் விதிக்கப்பட்டது.

### ரயில்வேக்களைப் பாதுகாக்க

ஹஸரிபாக் ஜில்லாவில் ரயில் பாதைகளைப் பாதுகாக்க எல்லோரும் பொறுப்பேற்றுக் கொள்ள ஏற்பாடாகி யிருப்பதாக பீஹார் சர்க்கார் அறிக்கை கூறுகிறது. ஸாதர், ஹாஜிப்பூர் ஸப் டிவிஷன்களில் மொத்தம் 539 கிராமாதிகாரிகள் நியமிக்கப் பெற்றிருக்கின்றனர்.

### போலீஸ் விடுதியைக் கொளுத்தியதற்கு 8 வருஷம்

நாகபுரி 4-வது சர்க்கிளில் போலீஸ் விடுதி ஒன்றைக் கொளுத்தியதாகக் குற்றம் சாட்டப்பட்டிருந்த மூவருக்குத் தலா 8 வருடக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

### பள்ளிக்கூடத்துக்கு அபராதம்

காசி மத்திய ஹிந்து ஸ்கூலுக்கு 100 ரூபா அபராதம் விதிக்கப்பட்டிருக்கிறது.

## ஹார்லிக்ஸ் கொடுக்கும்வரை ஒரு உணவையும் சாப்பிட முடியவில்லை

டாக்டர்களுக்கு 104" ஜுரம் அபாயத்தின் அறிகுறியாம். ஆகாரம் உட்கொள்ள முடிகிறதில்லை. ஜுரமோ மும்முரமாகி தசைக் குழாய்களை அழிக்கிறது.

இன்னிலைமையில் ஹார்லிக்ஸே தகுந்த உணவென்று டாக்டர்கள் கூறுகிறார்கள். அது எளிதில் ஜீர்ணமாகி, தளர்ந்த தேகத்திற்கு போஷண மளித்து பலம் ஊட்டுகிறது. அதில் சகல குணங்களும் அடங்கியுள்ளது. நரம்புகளையும் தசை நார்களையும் உயிர்ப்பித்து தேகம் குணமடையவிருக்கும் நெருக்கடி வேளையில் வேறு நோய்களை யணுக வொட்டாமல் பாதுகாக்கிறது.

நம் நாட்டில் முக்கிய ஆஸ்பத்திரிகளிலெங்கும் ஜுரத்திற்கு ஹார்லிக்ஸை பத்திய உணவாக ஆதரித்து வருகின்றனர். ஆயிரக்கணக்கான பேர்கள் ஹார்லிக்ஸினாலேயே உயிர் பிழைத்து விரைவில் மீண்டும் பூர்ண ஆரோக்கியமும் பலமும் பெற்றிருக்கிறார்கள்.



## 'தனி விசாரணை கூடாது'

கலவரங்களைச் சமாளிக்கும் விஷயத்தில் அதிகாரிகள் அத்துமீறி நடந்துகொண்டதாகப் புகார் செய்யப்படுவது பற்றி விசாரணை செய்வதற்கு பம்பாய் மாகாணத்திலுள்ள சில வக்கீல் சங்கங்கள் கமிட்டியொன்றை நியமித்திருப்பதாகச் சர்க்காருக்குத் தெரியவருவதாயும், தங்கள் ஊழியர்களுக்கும், ராணுவத்தினருக்கும் எதிராக அத்தகைய கமிட்டிகளும் உத்யோகப்பற்றற்ற ஸ்தாபனங்களும் சாட்சியம் தயாரிப்பதற்கு சர்க்கார் இடங்கொடுக்க முடியாதென்றும், அவ்வாறு இடங்கொடுத்தால் சர்க்கார் நிர்வாகத்துக்கு மாறான பலனேற்படு மென்றும், கமிட்டிகளின் முடிவுகள் அனேகமாக உண்மைக்குப் புறம்பாகவே இருக்கக்கூடு மென்றும், எனவே அத்தகைய முயற்சியைத் தடுக்க அவசியமான நடவடிக்கை யெடுக்கப்படு மென்றும் பம்பாய் சர்க்கார் ஒரு அறிக்கை விடுத்திருக்கின்றனர்.

### போலீஸ் விசாரணை

செப்டம்பர் 26உ பலசூர் ஜில்லா எரம் என்ற இடத்தில் நடந்த துப்பாக்கிப் பிரயோகம் சம்பந்தமாக விசாரணை செய்ய சர்க்கார் உத்தரவிட்டிருப்பதாகக் கட்டாக் செய்தி கூறுகிறது. போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஷை விசாரணையை நடத்துவார்.

### ஆலையில் வெடி குண்டு

ஷோலாப்பூர் ஆலையில் வெடிகுண்டெறிந்து அங்கு நடக்கும் யுத்த வேலைகளைத் தடுக்க முயன்றதாக 8 பேர்மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. தொழிலாளர் சிலருக்கும் குண்டு வீச்சால் காயமேற்பட்டது.

### அபராத வசூல் நிறுத்தம்

வங்காளத்தில் பூஜா கொண்டாட்டத்தை முன்னிட்டு அக்டோபர் 26உ வரைக் கூட்டு அபராதம் வசூலிப்பது நிறுத்தப்பட்டிருக்கிறது.

### காதி பந்தருக்கு சீல்

காமில்லாவிலிருக்கும் சர்க்கா சங்கக் கதர் பந்தர் சட்டவிரோதமான ஸ்தாபனமென அறிவிக்கப்பட்டு, போலீஸாரால் சீல் வைக்கப்பட்டு விட்டது.

### ரவீந்திரர் பேத்திக்குத் தண்டனை

டாக்டர் ரவீந்திரநாத் தாகூரின் பேத்தியான ஸ்ரீமதி நந்திதா தேவியும், ஸ்ரீமதி சுமத்திரா ஸென்னும் மற்றும் 6 பேர்களும் பாதுகாப்புச் சட்டப்படி 6 மாதக் காவலும் 100 ரூபா அபராதமும் விதிக்கப்பட்டிருக்கின்றனர். ஸ்திரீகளுக்கு வெறுங்காவலும் வாலிபர்களுக்குக் கடுங்காவலும் விதிக்கப்பட்டன.

### ஏர் கிராப் கடிதங்கள்

லண்டன் ஜெனரல் போஸ்டாபீசில் தினமும் 2½ லட்சம் ஏர் கிராப் கடிதங்கள் கையாளப்படுகின்றன. கிறிஸ்துமஸ் சமீபிப்பதோடு இது 10 லட்சமாக அதிகரிக்கலாம்.

அஸ்ஸாம் மாகாணத்தில் அக்டோபர் 19உ வரை மொத்தம் ரூ 2,35,950 கூட்டு அபராதம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நகருக்கு மட்டும் ஒரு லட்ச ரூபாய் விதிக்கப்பட்டிருக்கிறது.

## பாங்கு முன் மறியல்

அக்டோபர் 14உ காரச்சியிலுள்ள ரிசர்வ் பாங்கு முன்பு மறியல் நடைபெற்றது. 8 பெண்கள் உள்பட 11 பேர் கைது செய்யப்பட்டனர். பின் ஒவ்வொருவருக்கும் 30 ரூபா அபராதமும் தவறினால் ஒருமாதக் காவலும் விதிக்கப்பட்டன.

நகர மாஜிஸ்திரேட் கோர்ட்டுக்குள் நுழைந்த நால்வருக்கு அங்கிருந்த நாற்காலியில் அமர்ந்து கோஷம் செய்ததற்காகத் தலா 50 ரூபா அபராதமும் தவறினால் 2 மாதக் காவலும் விதிக்கப்பட்டன.

15-ந் தேதியும் பாங்கு முன் மறியல் நடைபெற்றது. கைது செய்யப்பட்டவர்கள் பின் விடுதலை செய்யப்பட்டனர்.

### ரிக்ஷாக்காரர்கள் மீது சந்தேகம்

காசியில் ஒரு ரிக்ஷாக்காரன் வீட்டைப் போலீசார் சோதனையிட்டதில் செப்புக் கம்பிகளும், கம்பிகளைத் துண்டிக்கும் ஆயுதங்களும் அகப்பட்டனவாம். ரிக்ஷாக்காரர் கூட்டமொன்று போக்குவரத்துக் கம்பிகளைத் துண்டிக்கும் வேலையில் ஈடுபட்டிருப்பதாகச் சந்தேகித்துப் போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்.

### சோல்ஜருக்குக் கத்திக் குத்து

அக்டோபர் 15-உ இரவு பம்பாய் குவீன்ஸ் ரோட்டில் ஒரு ஸோல்ஜர் தாக்கப்பட்டது சம்பந்தமாகப் போலீசார் 12 பேரைக் கைதுசெய்தனர். பின்னர் இவர்கள் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டனர். சோல்ஜர் கத்தியால் குத்தப்பட்டதாகத் தெரிகிறது.

### கதர்க் கடைப் பணம் ஜப்தி

பீஜப்பூரிலுள்ள இரண்டு பெரிய வியாபாரிகளின் வீடுகளைப் போலீசார் சோதனையிட்டபோது, ஒருவரது கடையில் அகிலபாரத சர்க்கா சங்கக்கடையின் ரசீதுப் புத்தக மொன்றைக் கைப்பற்றினர். அந்தக் கணக்கில் 600 ரூபா அதிகப்படியிருந்ததை ஜப்தி செய்திருக்கின்றனர்.

### ஜில்லா போர்டு மெம்பர்கள் ராஜினமா

பெல்காம் ஜில்லா போர்டு மெம்பர்கள் 31 பேரில் 15 பேர் ராஜினமாச் செய்து விட்டனர்.

### தீ வைக்க முயற்சி

அக்டோபர் 15-உ சில இடங்களில் தீ வைத்துக் கொளுத்த முயற்சிகள் நடந்ததாக அலகாபாத் செய்தி கூறுகிறது. சர்க்கார் ஆபீஸ் மாடிப் படியின் கீழ் நாட்டு வெடி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. அதனுள்ளே கொடிய வெடி மருந்துகள் இருந்தனவாம்.

நகரத் தபாலாபீசைச் சேர்ந்த ஒரு தபால் பெட்டிக்குள் திராவகங்களும் பாஸ்பரஸும் காணப்பட்டனவாம்.

### அமெரிக்காவில் காந்தி ஜயந்தி

அமெரிக்காவிலிருக்கும் இந்தியா லீக் மகாத்மா காந்தியின் பிறந்த தினத்தை நியுயார்க்கில் அக்டோபர் 17உ ஒரு விருந்துடன் கொண்டாடிற்று. ஸர்தார் ஜே. ஜே. சிங் தலைமைவகித்தார். பலர் மகாத்மாவைப் பாராட்டிப் பேசினர்.

பெட்டிகோலா (இலங்கை) வில் காக்கைத் தொல்லை அதிகமாயிருப்பதால், 1000 காக்கை முட்டைகளை அழிக்க ஏற்பாடு செய்வதென நகர சபை தீர்மானித்து அதற்கு 10 ரூபா அனுமதித்திருக்கிறது.

## தலைவர்களை விடுவிக்க விஞ்ஞாபனம்

இந்தியப் பொதுவுடமைக் கட்சியின் டில்லிக் கமிட்டி தயாரித்துள்ள விஞ்ஞாபனத்தில், இந்திய சுதந்திரத்தை அங்கீகரிக்க வேண்டுமென்றும், காங்கிரஸ்-லீக் ஒற்றுமை ஏற்படுத்துவதற்காகத் தேசியத் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்றும் குறிப்பிட்டிருக்கிறது. இதில் இதுவரை 10,000 பேர் கையொப்பமிட்டிருக்கின்றனராம்.

### கலக்டர் ஆபீஸ் முன்பு மறியல்

கல்பாரி ஸப் டிப்டிக் கலக்டர் ஆபீஸ் முன்பு அக்டோபர் 18உ மறியல் செய்த 7 பேர் கைது செய்யப்பட்டதாக கௌஹாத்திச் செய்தி கூறுகிறது.

### காலேஜ் புரபஸருக்கு 2 வருடம்

வார்தாக் கமர்ஷியல் காலேஜ் புரபஸர் ஒருவருக்கு, ஆட்சேபகரமாகப் பேசியதற்கு 2 வருஷக் கடுங்காவல் விதிக்கப்பட்டிருக்கிறது.

### தவறினால் நேர்ந்த விபரீதம்

கராச்சியில் தேவன்தாஸ் என்ற காங்கிரஸ் ஊழியர் ஊர்வலத்தில் கலந்துகொண்டதற்காக 10 ரூபா அபராதம் விதிக்கப்பட்டார். அவர் அபராதத்தைச் செலுத்தாததால் ஒரு மாதக் காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அவரது தகப்பனர் கோர்ட்டுக்குச் சென்று அபராதம் செலுத்துவதற்காக, ரிஜிஸ்டரில் தன் புத்திரர் பெயரைத் தேடிப்பார்த்தார். தேவன்தாஸ் நகூமால் என்ற பெயர் தென்பட்டது. உடனே அந்தப் பெயருக்காக அபராதத்தைச் செலுத்திவிட்டுச் சிறைவாயிலில் தன் மகனை எதிர்நோக்கிநின்றார். ஆனால், அங்கே அவர் மகனுக்குப் பதில், நகூமால் என்பவர் வெளியே வந்தார். நடந்த தவறை உணர்ந்த நகூமால் தாம் திரும்பவும் சிறைக்குச் செல்ல விரும்புவதாகத் தெரிவித்தார். ஆனால் அபராதம் செலுத்தப்பட்டுவிட்டதால் மீண்டும் சிறைக்கனுப்ப முடியாதென மாஜிஸ்திரேட் மறுத்துவிட்டார்.

### ஆசிரியர்கள் கைது

புனவில் ஒரு பாடசாலைத் தலைமை ஆசிரியரும், மற்றொரு ஆசிரியரும் அக்டோபர் 16-உ பாதுகாப்புச் சட்டப்படி கைதுசெய்யப்பட்டனர்.

### பள்ளிக்கூடம் தீக்கிரை

பாட்னவில், அலிவிக்கிரம் ஸ்டேஷன் எல்லைக்குட்பட்ட ஒரு ஸ்கூலுக்கு யாரோ தீ வைத்துக் கொளுத்திவிட்டனராம்.

குமரன்

காரைக்குடி
சித்திரபானு-ஸு ஐப்பசி-மீ 6-௳

## சாவு எப்பொழுது?

சண்டை தோடங்கி மூன்று ஆண்டுகள் கடந்துவிட்டன. மூன்றாண்டுகளிலும் இதன் கொடூரம் இங்கேயுள்ள மக்களைத் தாக்கிவிட வில்லை. சென்ற சில மாதங்களில்தான் பலரைச் சாவுக்கு நெருக்கிக் கொண்டு வருகிறது. நெல் — அரிசி — கேப்பை போன்ற தான்ய விலையில் இடிவிழுந்து விட்டது. ரூபாய்க்கு இரண்டு படியும் மூன்று படியும் அரிசி வாங்கிச் சாப்பிட்டு உயிர் வாழ எத்தனை பேருக்கு முடியும்? ஏழைகளின் உணவாகத் தேடுவாரில்லாமல் கிடந்த கேப்பை ரூபாய்க்கு ஐந்து படி யென்றால் பொது ஜனங்கள் என்ன செய்வார்கள்? இதற்குப் பரிகாரம் ஏதாவதுண்டா என்று கேட்டால் கண்ட்ரோலர்கள் 'வாகன்களால்தான் தாமதம், வேறொன்று மில்லை, தேங்கிக் கிடக்கிறது, போதுமான சரக்கு இருக்கிறது' என்கிறார்கள். அரசாங்கத்தார் வாகன்கட்கு ஏற்பாடு செய்யப்படுகிறது, செய்யப்பட்டு விட்டது என்று அறிவிக்கிறார்கள். எப்படியானாலும் கேப்பை அறுவடையாகிற காலத்தில் 5 படி என்றால் பின்னால் என்னவாகுமோ? புது நெல் மார்கழிக்கு மேலேதான் வரப்போகிறது. இன்றிருக்கிற தண்ட விலை குறைய வழி யெப்படி யேற்படப் போகிற தென்பது தெரியவில்லை. நெல்விலை ஏற்றத்தை யொட்டியே மற்றெல்லாம் ஏறி நிற்கின்றன.

சீனித் தொல்லை பெருந் தொல்லை. இதன் கிராக்கி வளர வளர கருப்பட்டி வீசை எட்டணாவிற்கு வந்திருக்கிறது. சீனி எத்தனை மூடையை அரசாங்கத்தார் வழங்க முற்பட்டாலும் பழய வியாபாரிகளை யொழித்து பொது ஜனச் சபைகளின் சார்பாக விட்டாலல்லது பலருக்கும் கிடைக்க வழியில்லை. ஆளுக்கு அரை வீசை சீனி வியாபாரம் சுத்த அபத்தமானது. காலை முதல் மாலை வரைக் காத்துக் கிடந்து வேலை கெட்டுப் போவதைத் தவிர உருப்பட்ட பலனேற்படவில்லை. தாராளமாக சீனி வந்து சவுதமாக வேண்டும். அல்லது காபி கிளப்புகளை மூடி கல்யாண முதலிய விசேஷவீடுகளில் சீனி உபயோகிக்கக் கூடாதென்று உத்தரவிட்டால் ஒருவாறு வியாபாரிகளை நம்ப முடியும். அல்லது பொது ஜனங்களின் நித்திய வாழ்வுக்குச் சீனி கிடைக்கும். "பணத்தைவிட்டால் மூடை மூடையாகச் சீனி கிடைக்கிறது" என்று கிளம்பும் வதந்தியை முற்றும் பொய் யென்று கூறிவிட முடியவில்லை.

மனித வாழ்வுக்கு வேண்டிய சகல பொருளையும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருதலென்பதும் முடியாத காரியம். இந்த தேசத்தில் எல்லாப் பொருள்களும் உற்பத்தியாகத்தான் செய்கின்றன. வெளிநாடுகளிலிருந்து வந்த — இப்பொழுது வரமுடியாத — பொருள்களைத்தான் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவேண்டும். மற்றப் பொருள்களைப் போக்குவரத்து வசதி கொடுத்துச் சீர்ப்படுத்தாதவரை துன்பம் ஒழியாது. அரிசி விலையும் கேப்பை விலையும் இப்படியே போய்க் கொண்டிருந்தால் ஏழை ஜனங்கள் வெகு விரைவாகச் சாவை நோக்கி நிற்பதைத் தவிர வேறு வகையில்லை யென்பது நிச்சயம். தொழிலாளிகள் சம்பாதிப்பது நாளொன்றுக்கு 0-4-0, 0-6-0 தான். இதுவும் நிச்சயமற்ற நிலைமையில் மனைவி மக்களை வைத்துக் கொண்டு உயிர் வாழ்தல் எதிர்பார்க்கக் கூடியதன்று. ஸ்தலத்திலுள்ள அதிகாரிகள் தகுந்த முயற்சி செய்தல் வேண்டும். உணவுப் பஞ்சத்திலிருந்து விளையும் கேடுகள் எளிதாக இரா.

பொதுஜனங்களில் செல்வர்களாயுள்ளவர்கள் தீவிரமாக முன் வந்து சாதாரண ஜனங்கட்கு உணவுப் பொருள்கள் லகுவாகக் கிடைப்பதற்கு வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டும். "பதினாயிரம் பேர் பட்டினிக் கிடையில் பணக்காரர் பத்துப் பேர் சுகமாக வாழமுடியாது" என்ற உரையைப் பரிசைஷ பார்க்கக்கூடாது. செல்வமுடையாரும் அதிகாரிகளும் முன்வந்து உண்மையுடன் உழைத்தால் அனாவசியமாக ஏற்பட்டு வரும் நெருக்கடியை சமாளித்து விடலாம். முக்கியமான உணவுப் பொருள் வியாபாரத்தைக் கடை வைத்துக் காலம் பார்த்து லாபமடிக்கும் வியாபாரிகளின் கையை விட்டுப் பிடுங்கிவிட வேண்டும். பூனையைப் பாலுக்குக் காவல் வைக்கிறமாதிரியாக அவர்கள் நிலைமையாகி விட்டபடியால், எந்த வழியிலும் லாபத்திலேயே திருஷ்டியைச் செலுத்திப் பழகிவிட்டபடியால் ஒழுங்குக்கு வரக்கூடுமென்றெதிர் பார்ப்பதைவிடத் தனி ஸ்தாபனங்கள் மூலம் முக்கிய பொருள்களை விற்பனை செய்யவேண்டியது அவசியமாகும். இப்பொழுதிருக்கிற நிலைமை நீடிக்குமானால் ஏழைகளும் நடுத்தர மக்களும், சாவு எப்பொழுது? என்று ஏங்கி நிற்க வேண்டித்தான் நேரும்.

—

### தமிழ் இசைச் சங்க 12-வது இசையரங்கு

தமிழ் இசைச் சங்கத்தின் பன்னிரண்டாவது இசையரங்கு 25-10-42 ஞாயிற்றுக்கிழமை மாலை 4-30 முதல் காரைக்குடி ஹைஸ்கூலில் நடைபெறும். கோலார் திருமதி ராஜம் பாட்டு, சென்னை திரு. கோபாலகிருஷ்ணய்யங்கார் வயலின், தஞ்சை திரு. கிருஷ்ணமூர்த்தி ராவ் மிருதங்கம்.

—

### செட்டியார்கள் நல உரிமைச் சங்கம் காரைக்குடி

நேற்று புதன்கிழமை ஷை சங்கத்தின் முதலாவது நிர்வாக சபைக் கூட்டம் தலைவர் ஸ்ரீ மெ. செ. ராமசாமி செட்டியார் தலைமையில் நடந்தது. கழனிவாசல் ஹரிஜன் ஸ்ரீ பெ. கன்னையா திருச்சி நாஷனல் காலேஜில் படிப்பதற்கு ரூபாய் 10 நன்கொடை அளிக்கப்பட்டது. நாகபட்டணம் இம்மிக்கிரேஷன் ஆபீஸில் நம் செட்டியார்களின் சார்பாக உள்ள நபர்கள் மலேயா செல்வதற்காகக் கட்டிய டிப்பாசிட்டுகளில், அங்கு போக முடியாமல் திரும்பி வந்தவர்களுடைய டிபாஸிட் தொகைகளையும், முன் இந்தியா திரும்பி வந்த நபர்களுக்குரிய டிபாசிட் தொகைகளையும் வாபஸ் பெறுவது சம்பந்தமாக நாகபட்டினம் நகரத்தாரு முத்தாத்தினம் செட்டியாருக்கு விவரம் எழுதிக் கேட்டு ஆவன செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

### நகரத்தார்களுக்கு விலக்களிக்க வேண்டுகோள்

நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமூகமானது சர்க்காருக்கு எல்லா வகையிலும் எவ்வளவோ உதவிகள் செய்து சாதகமாக இருந்துவந்திருப்பதால், காரைக்குடிக்கு ரூபா 50,000 கூட்டு அபராதம் போட்டிருப்பதி லிருந்து நம் செட்டியார்களுக்கு விலக்களிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்வதெனக் ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

—

### பிரபுக்கள் சபையில் இந்தியா பற்றி விவாதம்

அடுத்த கூடும் பிரிட்டிஷ் பிரபுக்கள் சபையில் இந்தியாபற்றிய விவாதத்தை டெவன்ஷயர் பிரபு ஆரம்பித்து வைப்பார் என்று தெரிகிறது.

### காரைக்குடியில் தடை உத்தரவு

விஜய தசமியை முன்னிட்டுப் பக்கத்துக் கிராமங்களிலிருந்து ஏராளமான ஜனங்கள் வரக்கூடுமென்றும், காரைக்குடிக்கு விதிக்கப்பட்ட கூட்டு அபராதத்தைக் கண்டிக்கச் சில காங்கிரஸ்காரர்கள் கூட்டம் போடுவார்கள் என்றும், சட்ட விரோதமான காரியங்கள் செய்யக்கூடுமென்றும் அதனால் கலகம் ஏற்படக் கூடுமென்றும் கருதி காரைக்குடி முனிசிபல் எல்லைக்குள் அக்டோபர் 14-ந் தேதி முதல் ஒரு மாதத்திற்கு, பொதுக் கூட்டங்களோ ஊர்வலங்களோ நடத்தக் கூடாதென்றும், ஐந்து பேர்கட்கு மேல் கூடக் கூடாதென்றும், திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்திரேட் ஸ்ரீ சோமசுந்தர முதலியார் தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறார். இது தண்டோரா மூலம் சென்ற வெள்ளிக்கிழமை காலை விளம்பரப்படுத்தப்பட்டது.

இந்தத் தடை உத்தரவு காரணமாகச் சென்ற திங்கட்கிழமை நடைபெறவேண்டிய மகார்நோன்பு விழா நடைபெறவில்லை. கோவிலூர், நகரச் சிவன் கோவில், பெருமாள் கோவில் சாமிகளும் கொப்புடையம்மனும் மகார்நோன்புப் பொட்டலில் அன்றையதினம் அம்பு போடுவது வழக்கம். ஆனால், அன்று எல்லாச் சுவாமிகளும் குதிரை வாகனங்களில் ஆரோகணிக்கப்பட்டு அந்தந்தக் கோவிலுக்குள்ளேயே அம்பு போட்டதாகத் தெரிகிறது.

#### ஸ்ரீ சாமிநாத ராவ் கைது

ஆட்சேபகரமான பிரசுரங்கள் வைத்திருந்ததாகக் காரைக்குடியில் சென்ற வெள்ளிக்கிழமை போலீஸார் ஸ்ரீ சாமிநாத ராவ் என்பவரைக் கைதுசெய்தனர்.

—

### வெள்ளி விலை ஏற்றம்

சென்ற சில தினங்களாக வெள்ளி விலை மிகவும் அதிகரித்து வருகிறது. தற்போதைய விலைகள் சென்ற 20 வருஷங்கட் கிடையில் காணப்பட வில்லையாம். 5-வது 6-வது ஜார்ஜ் ரூபாய், அரை ரூபாய் நாணயங்களை இந்திய சர்க்கார் செலாவணியிலிருந்து வாபஸ் பெறுவதே இதன் காரணமென்று "சுதேசமித்திரன்" அபிப்பிராயப்படுகிறது. மேற்குறித்த நாணயங்களின் 12ல் 11-பாகம் சுத்த வெள்ளியாகும். அடுத்த மே மாதம் முதல் தேதி இந்த வாபஸ் உத்தரவு அமுலுக்கு வருகிறது. ஏற்கனவே விக்டோரியா, ஏழாவது எட்வர்ட் தலையுள்ள முழு ரூபாய்களும் அரை ரூபாய்களும் வாபஸ் பெறப்பட்டு விட்டன. எனவே அடுத்த மே மாதத்துடன் நல்ல வெள்ளி உடைய நாணயங்கள் எல்லாம் செலாவணியிலிருந்து வாபஸாகி விடும்.

—

### பின்லந்துடன் தனி சமாதானம்
#### போப்பிற்கு மானர்ஹீம் கடிதம்

பின்லந்துடன் தனி சமாதானம் செய்து கொள்ளுவதற்கான ஹேதுபற்றி விவாதிக்கும் கடிதமொன்றை பீல்டு மார்ஷல் மானர்ஹீம் போப்பிற்கு எழுதி யிருப்பதாக ஸூரிச் செய்தி கூறுகிறது. பின்லந்துக்குச் சாதகமான நிபந்தனைகளை ஏற்படுத்திக் கொடுக்கும்படி ஆங்கிலோ-ஸாக்ஸன் சர்க்கார்களிடம் தமக்குள்ள செல்வாக்கை உபயோகிக்கும்படி அவர் போப்பை வேண்டிக் கொண்டிருக்கிறாராம்.

—

### இலங்கை யூனிவர்ஸிட்டிப் பட்டமளிப்பு விழா

புதிதாக ஸ்தாபிக்கப்பட்ட இலங்கை யூனிவர்ஸிட்டியின் முதலாவது பட்டமளிப்பு விழா அக்டோபர் 14௳ நடைபெற்றது. இலங்கை கவர்னர் ஸர் ஆண்ட்ரு கால்டிகாட், கல்வி மந்திரியும் புரோசான்ஸலருமான ஸ்ரீ கன்னங்கரா, ஸர் பாரன் ஜயதிலகா, லேடி ராமநாதன், ஹிந்து சர்வகலாசாலை வைஸ்சான்ஸலர் ஸர் யஸ். ராதாகிருஷ்ணன், சென்னை யூனிவர்ஸிட்டி வைஸ் சான்ஸர் டாக்டர் எஸ். லட்சுமணசாமி முதலியார் முதலியோருக்கு கவுரவ யல். யல். டி. பட்டம் வழங்கப்பட்டது.

### தேவகோட்டையில் 112 பேர் மீது வழக்கு

17-8-42ல் தேவகோட்டையில் சட்ட விரோதமாகக் கூடி, போலீஸ் அதிகாரிகளையும் சர்க்கார் உத்யோகஸ்தர்களையும் தாக்கியதாயும் கல்லெறிந்து கலவரம் செய்ததாயும், சப்கோர்ட்டுக்கும், மோட்டார் பஸ் முதலியவற்றிற்கும் தீ வைத்ததாயும் தேவகோட்டைப் போலீசார் ராமன் அம்பலம் முதலிய காங்கிரஸ்காரர்கள் உள்பட மொத்தம் 112 பேர் மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்திருப்பதாகத் தெரிகிறது. 112 பேர்களில் 30 பேர்வரை இன்னும் கைது செய்யப்பட வில்லையென்றும், அவர்களைப் போலீசார் தேடி வருவதாயும் தெரிகிறது.

#### இருவருக்கு ஸ்பெஷல் வகுப்பு

மேற்படி கலவர வழக்கு எதிரிகளில் ஒருவரான தேவகோட்டை திரு. டி. ஆர். அருணாசலம் செட்டியாருக்கு மதுரை ஜில்லா ஜெயிலில் உணவு, படுக்கை வசதியுடன் தற்காலிகமாக ஸ்பெஷல் வகுப்பு அளிக்கப்படுவதாயும் மற்றொரு எதிரியான திரு. திருநாவுக்கரசுச் செட்டியார் தற்காலிகமாக உயர்தர வகுப்புக்கு மாற்றப்பட்டிருப்பதாயும் சொல்லப்படுகிறது.

#### அபராதத்திலிருந்து விலக்க வேண்டுகோள்

தேவகோட்டை நகருக்கு விதிக்கப்பட்டிருக்கும் கூட்டு அபராதத்திலிருந்து தேவகோட்டை நகரத்தார்களுக்கு விலக்களிக்க வேண்டுமென்று ஜில்லாக் கலக்டர் மூலம் சர்க்காரைக் கேட்டுக் கொள்வதெனத் தேவகோட்டை நகரத்தார் கூடிப் பேசி முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

#### சரண் புகுந்தனர்

சில குற்றங்களுக்காகப் போலீசார் தேடிவந்த சின்னையா அம்பலம் முதலிய 9 பேர்கள் மதுரை நகர சப்மாஜிஸ்திரேட்டிடம் சரண்புகுந்ததாயும், அவர்கள் திருப்பத்தூர் சப் ஜெயிலுக்குக் கொண்டு வரப்பட்டிருப்பதாயும் தெரிகிறது. இதே வழக்கில் சம்பந்தப்பட்ட வேறு 7 பேர் சமீபத்தில் திருச்சினப்பள்ளி சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட்டிடம் சரண் புகுந்தார்களாம்.

திருவாடானை சப்ஜெயிலிலிருந்து தப்பிய தேவகோட்டை திரு. S. அண்ணாமலைச் செட்டியார் ஸ்ரீ N. ராமநாதனுடன் தேவகோட்டைப் போலீசாரிடம் அக்டோபர் 17௳ சரண்புகுந்ததாகச் சொல்லப்படுகிறது.

#### ஸ்ரீ நாராயணசாமிச் செட்டிக்குத் தண்டனை

ஆட்சேபகரமான துண்டுப் பிரசுரங்கள் வைத்திருந்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட ஸ்ரீ நாராயணசாமிச் செட்டிக்கு தேவகோட்டை சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட் 9 மாதக் கடுங்காவல் விதித்திருக்கிறார்.

#### கடைகளில் கொள்ளை

அக்டோபர் 17௳ மேலப்பாளையத்தில் 3 கடைகளை முஸ்லிம்களடங்கிய ஒரு கூட்டம் தாக்கி சாமான்களைக் கொள்ளை கொண்டு போயிற்று. 3 பேர் கைது செய்யப்பட்டனர். அவர்களை விடுவிக்க ஒரு கூட்டம் ஸ்டேஷன் மீது கல்லெறிந்ததாயும், போலீஸார் கலைத்ததாயும் தெரிகிறது. ஒரு கடைக்காரர் மண்ணெண்ணெய் விற்க மறுத்ததாலேயே கலவரம் நடந்ததாயும், இப்போது நிலைமை சீர்ப்பட்டுவிட்டதாயும் தெரிகிறது. மாக்கடி ஜிண்டா ராவுத்தர் முதலிய 18 பேர் மீது போலீஸார் வழக்குத் தொடர்ந்திருக்கின்றனர். இவரில் 14 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

#### தேன் கன்னட ஜில்லாபோர்டுத் தீர்மானம்

அக்டோபர் 17௳ கூடிய தென்கன்னட ஜில்லாபோர்டு, தேசியத் தலைவர்கள் கைது செய்யப்பட்டதை ஆட்சேபித்துத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. ஜில்லாக் காங்கிரஸ் முடிவுப்படி, போர்டிலுள்ள 5 காங்கிரஸ் கட்சி மெம்பர்கள் ராஜிநாமாச் செய்திருக்கின்றனர். தலைவரும் ராஜிநாமாச் செய்ய விருந்தார். ஆனால் போர்டுக் காங்கிரஸ் கட்சி கேட்டுக் கொண்டதற் கிணங்க அவர் ராஜிநாமாச் செய்யவில்லை.



### போலீஸ்காரர் மறியல்

மன்னார்குடிக்கு விதிக்கப்பட்டிருக்கும் கூட்டு அபராதத்தை வசூல் செய்யும் அதிகாரியான ஸ்பெஷல் டிப்டி தாசில்தார் ஸ்ரீ ஆர். வெங்கட்ராமனின் உத்தரவுப்படி அக்டோபர் 13௳ பெரியகடைத் தெருவில் இரண்டு கடைகளும் ஒரு காப்பி ஹோட்டலும் ரிசர்வ் போலீசாரால் மறியல் செய்யப்பட்டன. வியாபாரம் கெட்டுப்போவதை முன்னிட்டு ஹோட்டல்காரர் அபராதத்தைச் செலுத்தியதன்மேல் போலீசார் அங்கிருந்து சென்றனர். மொத்தம் விதிக்கப்பட்ட ரூபா 50,000ல் ஒரு வாரத்துக்குள் ரூபா 26,000 வசூலாகிவிட்டதாகத் தெரிகிறது.

#### கோர்ட்டுமுன் மறியல்

அக்டோபர் 13௳ மதுரை, திருமலை நாயக்கர் மகாலிலுள்ள ஜில்லா செஷன்ஸ் கோர்ட்டு முன்பு மறியல் செய்த பெருமாள் உடையார் என்பவர் கைது செய்யப்பட்டு, பின் எச்சரிக்கையுடன் விடுதலை செய்யப்பட்டார்.

#### சிறை மாற்றம்

ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர் ராஜமகேந்திரபுரம் ஜெயிலிருந்து வேலூர் சிறைக்கு மாற்றப்பட்டிருக்கிறார்.

#### ஊர்வலம் நடத்தியதற்குக் கடுங்காவல்

காந்தி ஜயந்தியன்று ஊர்வலம் நடத்தி கோஷம் செய்ததற்காகக் குண்டூர் ஸ்பெஷல் மாஜிஸ்திரேட், தேசபக்த கொண்ட வெங்கடப்பையாவின் பேரன் ஸ்ரீ எல். வெங்கடேஸ்வர்லு, ஸ்ரீ சேஷாசார்லு, Ch. வெங்கடேஸ்வர்லு ஆகியோருக்குத் தலா ஒரு மாதக் கடுங்காவலும் 50 ரூபா அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினால் மேற்கொண்டு ஒரு மாதக் கடுங்காவலும் விதித்திருக்கிறார்.

#### உபாத்தியாயர் கைது

புளியங்குடி போர்டு கலாசாலை உபாத்தியாயர் ஸ்ரீ நல்லகண்ணுப் பிள்ளை பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டிருப்பதாக சங்கரன் கோவில் செய்தி கூறுகிறது.

#### நால்வருக்குத் தண்டனை

ஆகஸ்டு 21—22-ந் தேதியன்று ஒரு கூட்ஸ் வண்டி தண்டவாளத்தை விட்டிறங்கக் காரணமா யிருந்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட வழக்கில், சுப்பராம தாஸ் முதலிய நால்வருக்கு சித்தூர் ஸ்பெஷல் ஜட்ஜ் 6 மாத முதல் 5 வருடக் கடுங்காவல் வரைப் பலவிதத் தண்டனைகளை விதித்துள்ளார். குற்றவாளி யெனக் கண்ட பாப்பாச்சாரி, மைனர் என்ற காரணத்தைக் கொண்டு எச்சரிக்கையுடன் விடுதலை செய்யப்பட்டான்.

#### இன்ஸ்பெக்டர் கார் தீக்கிரை

அக்டோபர் 14-ம் தேதி இரவு திருக்கோயிலூர் சர்க்கிள் இன்ஸ்பெக்டரின் மோட்டார் காருக்கு யாரோ தீவைத்து விட்டதாயும், 'கார் எரிந்து போயிற்றென்றும், போலீசார் இது சம்பந்தமாக விசாரணை செய்து வருவதாயும் தெரிகிறது.

#### ஸ்ரீ கோபால் ரெட்டிக்குத் தண்டனை

சென்னை மாஜி மந்திரியான ஸ்ரீ பி. கோபால ரெட்டியும், ஸ்ரீ வி. கோதண்டராம ரெட்டியும் அக்டோபர் 13௳ பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டனர். காங்கிரஸ் கமிட்டித் தீர்மானத்தை ஆதரிக்கும்படி இருவரும் நெல்லூர் ஜில்லா பஞ்சாயத்து போர்டுகளுக்குப் பிரசுரங்கள் அனுப்பியதாகக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

அக்டோபர் 15௳ நடைபெற்ற விசாரணையில் இருவருக்கும் தலா 6 மாதக் கடுங்காவல் விதிக்கப்பட்டது. இருவரும் அலிப்புரம் சிறைக்கு அனுப்பப்பட்டனர்.

#### ராமநாதபுரம் ஜில்லாபோர்டு
#### ஸ்ரீ வி. வி. ராமசாமி நாடார் ஸ்பேஷல் ஆபீசர்

விருதுநகர் ஸ்ரீ வி. வி. ராமசாமி நாடார் இராமநாதபுரம் ஜில்லா போர்டின் ஸ்பெஷல் ஆபீசராக சர்க்காரால் நியமிக்கப் பெற்றிருக்கிறார். அவருக்கு மாதம் 500 ரூபா சம்பளம் கொடுக்கப்படும்.

### ஹர்த்தால் அனுஷ்டித்ததாக
#### 32 வியாபாரிகள் மீது வழக்கு

அக்டோபர் 9௳ தங்கள் கடைகளை மூடி ஹர்த்தால் அனுஷ்டித்ததற்காக ராமநாதபுரத்தில் முக்கியமான 22 மளிகை வியாபாரிகளையும், 10 காப்பிக்கடைக் காரர்களையும் போலீஸார் கைது செய்து காவலில் வைத்தனர். பின் ஜாயிண்டு மாஜிஸ்திரேட்டால் அவர்கள் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டனர். அக்டோபர் 16௳ காலை ராமநாதபுரம் ஜாயிண்டு மாஜிஸ்திரேட் முன்பு இவ் வழக்கு விசாரணைக்கு வந்தபோது, தமிழ் மாதம் கடைசி ஞாயிற்றுக்கிழமை தவிர வேறு தினங்களில் இனிக் கடைகளை அடைக்கமாட்டார்களென்றும், இப்பொழுது செய்தது தவறு என்றும் எதிரிகள் நீதிபதியிடம் கூறியதன் மேல், எல்லா வியாபாரிகளும் ஒரு வருஷம் நன்னடத்தை ஜாமீனும், ரூபா 300 க்கு இரு நபர் ஜாமீனும் கொடுக்க வேண்டு மென்று தீர்ப்பளிக்கப்பட்டது. கடைசி ஞாயிறு தவிர இதர நாட்களில் கடையடைக்கக் கூடாதென்றும், ஏதாவது பண்டிகையை முன்னிட்டு அன்று கடை வைக்க நேரிட்டால், ஸர்க்கிள் இன்ஸ்பெக்டரைக் கலந்து வேறு தினத்தில் கடையடைப்பு வைத்துக்கொள்ளலா மென்றும் தெரிவிக்கப்பட்டது.

#### மாஜிப் போலீஸ் சேவகருக்கு 18 மாதம்

மாஜிப் போலீஸ் சேவகர் ஸ்ரீ கேசவன் நாயர் என்பவர் ஆட்சேபகரமான பிரசுரங்களை வைத்திருந்ததற்காகக் கூனூர் மாஜிஸ்திரேட் அவருக்கு 18 மாதக் கடுங்காவல் தண்டனை விதித்திருக்கிறார்.

#### கல்லூரி ஆசிரியர் கைது

கள்ளிக்கோட்டை, மலையாளக் கிறிஸ்தவக் கல்லூரியில் ஆசிரியரான ஸ்ரீ வி. ஆர். சுப்பிரமணியம் பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டு வேலூருக்கு அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார்.

#### போர்டு உப தலைவருக்குக் கடுங்காவல்

இந்தியப் பாதுகாப்பு விதிகளின் கீழ் கைது செய்யப்பட்ட மதுரை ஜில்லா போர்டு உபதலைவர் ஸ்ரீ கே. வெங்கிடாசலபதிக்கும், வடக்கம்பட்டி காங்கிரஸ்வாதி ஸ்ரீ மதுர கவி ரெட்டியாருக்கும் 18 மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

காவலில் இருக்கும் மதுரை ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ முனகால பட்டாபிராமய்யா பாதுகாப்பு விதிகள் 129-வது பிரிவின்கீழ் கைது செய்யப்பட்டதாக மதுரை ஜில்லா கலெக்டர் தெரிவித்திருக்கிறார்.

#### ஸ்ரீ ஈ. வெ. ரா. வேண்டுகோள்

ராம் குமார ராஜா ஸ்ரீ முத்தையா செட்டியாருடன் சென்னை கவர்னரைக் கண்டு தற்போதையக் கலவரத்தில் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் பங்கெடுத்துக் கொள்ளாததால், மன்னார்குடி முதலிய இடங்களில் விதிக்கப்பட்டிருக்கும் கூட்டு அபராதத்தை ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்தவர்களிட மிருந்து வசூலிக்கக் கூடாதென்று தெரிவித்ததாயும், இவ்விஷயத்தைப்பற்றி ஆலோசிப்பதாகக் கவர்னர் வாக்களித்ததாயும் ஜஸ்டிஸ் கட்சித் தலைவர் ஸ்ரீ ஈ. வெ. ராமசாமி நாயக்கர் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

#### விருதுநகர் நகர சபை கலைக்கப்பட்டது

விருதுநகர் நகர சபையை சர்க்கார் ரத்து செய்து கமிஷனரை ஸ்பெஷல் ஆபீசராக நியமித்திருக்கின்றனர். காங்கிரஸ் கமிட்டித் தீர்மானத்தை ஆதரித்ததே இதன் காரணம்.

—

### தூக்குத் தண்டனை

முதுகுளத்தூர் தாலூகா, கொடுத்துரைக் கண்மாயில் 19-5-42ல் இருதயக் கோயிலைச் சேர்ந்த மாரியம்மாள் என்ற 17 வயதுப் பெண்ணைக் கொன்று அவளிடமிருந்த நகைகளைக் கொள்ளையிட்டதாகக் குற்றம் சாட்டப்பட்ட வழக்கில், ராமநாதபுரம் செஷன்ஸ் ஜட்ஜ் முதல் எதிரி வேலுத்தேவனுக்குத் தூக்குத் தண்டனை விதித்து 2வது எதிரி சங்கையா சேர்வையை விடுதலை செய்திருக்கிறார்.

### அரிசி வாங்குவோர் மீது துப்பாக்கிப் பிரயோகம்

#### ஷாங்கையில் ஜப்பானியர் அக்கிரமம்

ஷாங்கையில் அரிசி வாங்குவதற்காக வரும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் காலையிலிருந்து இரவு வரைத் தெருக்களில் கூடி நிற்பதாயும், அவர்கள் ஆர்ப்பாட்டத்தைத் தடுக்க ஜப்பானியப் போலீசார் துப்பாக்கிகளையும், சவுக்குகளையும் பிரயோகிக்கின்றனர் என்றும், ஷாங்கையைச் சுற்றியுள்ள வயல்களில் ஏராளமாக நெல் விளைந்த போதிலும் நெல் முழுவதும் ஜப்பானுக்கு அனுப்பப்பட்டு வருகிறதென்றும் சங்கிங் செய்தி கூறுகிறது.

—

#### வகுப்பு ஒற்றுமையை வளர்க்க விருந்து

முஸ்லீம் சகோதரர்களுடன் தசராவைக் கொண்டாடுவதற்காகவும், இரு வகுப்புகளுக்குமிடையே ஒற்றுமையையும் நல்லெண்ணத்தையும் வளர்ப்பதற்காகவும் விஜய நகர மகாராஜ குமார் ஸ்ரீ விஜயா அக்டோபர் 17௳ மாலை காசியிலுள்ள தமது அரண்மனையில் தேநீர் விருந்து நடத்தினர். ஏழைகள் பலருக்கு அன்னமிடப்பட்டது.

—

### 70,000 மதிப்புள்ள சாமான்கள் பறிமுதல்

யாழ்ப்பாணத்துக்குத் திருட்டுத்தனமாக ஏற்றுமதி செய்வதற்கென, முத்துப்பேட்டை, தோப்புத்துறை முதலிய பிரதேசங்களில் சேர்த்து வைக்கப்பட்டிருந்த சுமார் 70,000 ரூபா மதிப்புள்ள அரிசி, துணி முதலிய சாமான்களைத் தஞ்சை அடிஷனல் மாஜிஸ்திரேட் ஸ்ரீ ஆர். டி. பால் கைப்பற்றியிருப்பதாக நாகபட்டினம் செய்தி கூறுகிறது. முத்துப்பேட்டையில் பலர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

#### யாழ்ப்பாணத்தார்க்கு எச்சரிக்கை

தஞ்சை ஜில்லாவிலிருந்து ஏராளமான நெல், அரிசி முதலியன திருட்டுத்தனமாக ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடுக்க தஞ்சை ஜில்லாக் கலெக்டர் கடுமையான நடவடிக்கைகளை யெடுத்துக்கொண்டிருக்கிறார். இந்த ஏற்றுமதிக்குக் காரணமான யாழ்ப்பாணத்தார் மூன்று தினங்கட்குள் ஜில்லாவைவிட்டு வெளியேறிவிட வேண்டுமென்று உத்தரவிட்டிருக்கிறார்.

—

#### பர்மா மலாயா பத்திரிகைகள்

ஜப்பானியர் ஆக்ரமித்துள்ள தென் பிரதேசங்களிலுள்ள பத்திரிகைகளின் பிரசுர விஷயமாக ஏற்பாடு செய்ய ஜப்பானிய டோமை ஏஜன்ஸித் தலைவர் ஷை பிரதேசங்களுக்குச் சென்றிருக்கிறார். மலாயா, பர்மா, வடபோர்னியோ, சுமாத்ரா, ஜாவா ஆகிய பிரதேசங்களிலுள்ள பத்திரிகைகளின் நிர்வாகமும், பிரசுரமும் ஜப்பானியப் பத்திரிகைகளால் ஏற்றுக் கொள்ளப்படும். அங்கங்கே உள்ள ராணுவ அதிகாரிகள் பத்திரிகைகளின் போக்கை நிர்ணயிப்பார்களாம்.

—

#### "நவயுக"த்துக்குத் தடை

"நவயுகம்" என்ற தாய் பாஷைத் தினசரிப் பத்திரிகையை வெளியிடக் கூடாதெனப் பம்பாய் சர்க்கார் அதன் ஆசிரியரும் பிரசுரகர்த்தாவுமான ஸ்ரீ காக்கல்பாய் கோதாரிக்கு உத்தரவிட்டிருக்கின்றனர். "பிரபாத்" என்ற தமது தினசரியை சர்க்கார் தடைசெய்த பிறகே அவர் "நவயுக"த்தை ஆரம்பித்தார்.

—

#### ரயிலில் வெடிகுண்டு

அக்டோபர் 19௳ அதிகாலை புனா—பெங்களூர் மெயில் பில்வாடி ஸ்டேஷனுக் கருகில் போய்க் கொண்டிருந்த பொழுது ஒரு வண்டியில் சுதேசி குண்டு வெடித்து அந்த வண்டி தீப்பிடித்து எரிய ஆரம்பித்து விட்டதாம். பில்வாடி ஸ்டேஷன் சேர்ந்த பிறகு தீயணைக்கப்பட்டது.

—

#### பிரஞ்சுக் கரையில் அரண்கள்

வட பிரான்ஸில் துரிதமாக அரண்கள் அமைக்கும் வேலையில் ஹிட்லர் கவனம் செலுத்தி வருகிறாராம். அங்கு வைக்கப்படும் பீரங்கிகளைத் திருப்பி பிரான்ஸை நோக்கியும் சுடலாமாம்.

### ஹெஸ்ஸைத் தண்டிக்க சோவியத் கோரிக்கை

நாஜி ஆக்ரமிப்புக் குள்ளான ஐரோப்பிய பிரதேசங்களில் நடந்துள்ள அட்டூழியங்களுக்கு ஜர்மனியும் அதன் கூட்டாளிகளுமே பொறுப்பாளிகள் என்று உறுதிப்படுத்தும் முறையில் சோவியத் சர்க்கார் விடுத்திருக்கும் அறிக்கையில், ஹிட்லரின் கும்பலைச் சேர்ந்த தலைவர்களது உத்தரவின் பேரில் குற்றமற்ற பலர் சித்திரவதைக் குள்ளாகி மாண்டிருப்பதால், அத்தலைவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்க வேண்டியது மிக அவசியமான கடமையாகு மென்று குறிப்பிட்டிருக்கின்றனர். "ஹிட்லர், கோயரிங், ஹெஸ், கோயபல்ஸ், ஹிம்லர், ரிப்பண்டிராப், ரோஸன்பர்க் முதலியவர்கள் செய்துள்ள கோரமான குற்றங்கள் மனித சமூகம் அறிந்தவையே. அவர்களில் யார் யார் நேசக் கட்சியிடம் அகப்பட்டிருக்கின்றனரோ அவர்களை உடனேயே ஒரு சர்வதேசக் கோர்ட்டு முன்பு விசாரித்துக் கடுமையாகத் தண்டிக்க வேண்டுமென்று கோரப்பட்டிருக்கிறது. பிரிட்டனிலுள்ள ஹெர் ஹெஸ்ஸையும், நேசக் கட்சி வசமுள்ள இதர நாஜி அரசியல் வாதிகள், ஜெனரல்களையும் உடனே விசாரணைக்குக் கொண்டு வரவேண்டு மென சோவியத் பொது மக்கள் கருதுகின்றனர் என்று மாஸ்கோச் செய்தி கூறுகிறது.

—

### இந்தியாவுக்குக் கொடுக்கும் வாக்குறுதி
#### "யுத்தத்திற்குப் பின் புறக்கணித்து விடாது"

பிரிட்டிஷ் தொழில் மந்திரி மிஸ்டர் எர்னஸ்ட் பெவின் அடியில் வருமாறு தெரிவித்திருக்கிறார்:—

நாம் இந்தியாவுக்குத் திட்டமான, உறுதியான வாக்குத் தத்தம் செய்திருக்கிறோம். அதை நிறைவேற்றி வைக்கக் கூடுமென்றே நம்புகிறேன். யுத்தம் முடிந்ததும், பிரிட்டன் தனது வாக்குறுதியைப் புறக்கணித்து விடுமென்று இந்தியா அஞ்ச வேண்டிய தில்லை. உள்நாட்டுக் கலகம் எதுவுமின்றி, இந்தியர் தாங்களாகச் செய்து கொள்ளும் ஏற்பாட்டை யொட்டி அந்நாடு அவர்களிடம் ஒப்படைக்கப்படுமென நான் எண்ணுகிறேன். ஆனால், இந்தியா, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குள்ளேயே இருந்து வரவேண்டு மென்பதில் எனக்கு விசேஷ அக்கரை உண்டு.

—

### பர்மாவைத் தாக்க ஏற்பாடு?
#### டில்லியில் சேனாதிபதிகள் மகாநாடு

புது டில்லிக்கு ஜெனரல் வேவல், ஜெனரல் ஆக்கின்லக், ஜெனரல் ஸ்டில்வெல் ஆகியவர்கள் விஜயஞ் செய்திருப்பது, பர்மாவைத் தாக்குவதுபற்றி ஆலோசிப்பதற்காக இருக்கலா மென்று நியுயார்க் ரேடியோ விமர்சகர்கள் அபிப்பிராயர் தெரிவித்துள்ளனர்.

—

### 1½ கோடி ரூபாய்க்குக் கதர் விற்பனை

1941-42ம் வருடத்து அகில இந்திய சர்க்கா சங்க அறிக்கையிலிருந்து 18 மாத காலத்தில் கதர் உற்பத்தியும், விற்பனையும் முறையே 1½ கோடி ரூபாயாகவும் 1½ கோடி ரூபாயாகவும் ஏறிவிட்டது தெரிகிறது. 15,000 கிராமங்களில் ஷை சங்க வேலைகள் நடைபெற்றன. நூற்போர், நெய்வோர், இவை சம்பந்தப்பட்ட தொழிற்செய்வோர் முதலிய 4 லட்சம் பேர்கட்கு வேலை கொடுத்திருக்கிறது. சம்பளமாக சுமார் 80 லட்சம் ரூபாய் விநியோகித்திருக்கிறது. மூலதனமாகப் போட்ட தொகை சுமார் 50 லட்ச ரூபாய்.

—

### சென்னை மார்க்கெட்

சென்னை, அக். 21௳

| | | | |
|---|---|---|---|
| சவரன் மொத்தம் | 43 | 14 | 0 |
| ,, சில்லறை | 44 | 0 | 0 |
| தங்கம் மூசை | 59 | 14 | 0 |
| வெள்ளி 100 தோலா | 108 | 8 | 0 |
| ஷை தோலா 1க்கு | 1 | 1 | 6 |

—

### கொளும்பு மார்க்கெட்

கொளும்பு அக். 19௳

| | |
|---|---|
| ஷீட் ரப்பர் | 71 சதம் |
| கிரீப் ,, | 72½ ,, |
| கொப்பரா கண்டி 1-க்கு | ரூ. 59 |

## ஸ்ரீரங்கம் செல்வோருக்கு எச்சரிக்கை

ஸ்ரீரங்கத்தில் காலரா நோய் பரவியிருப்பதால், தலஸ்நானத்திற்கு அங்கு செல்வோர் முன்னதாகத் தடைமருந்து குத்திக் கொள்ள வேண்டுமென்று ஸ்ரீரங்கம் சுகாதார அதிகாரி யோசனை கூறியிருக்கிறார்.

நாகபட்டினத்திலும் காலரா தோன்றியிருப்பதாகத் தெரிகிறது.

## ஸையத் மகமத் கைது

பரமகுடியில் கல்யாணி அம்மாள் கொலை செய்யப்பட்டது சம்பந்தமாகப் போலீசார் தேடிவந்த ஸையத் முகமது என்பவர் போலீசாரால் கைது செய்யப்பட்டு விட்டார். களவுபோன நகைகளில் ஒரு பகுதி மதுரையிலுள்ள ஒரு கடையிலிருந்து ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் மிஸ்டர் அன்வர் அலியால் மீட்கப்பட்டன என்று தெரிகிறது.

## புதுக்கோட்டைத் தமிழ் இசை மகாநாடு

தமிழிசை வளர்ச்சியை முக்கிய நோக்கமாகக் கொண்டு புதுக்கோட்டை டவுன் ஹாலில், அக்டோபர் 23, 24, 25, 26 தேதிகளில் தமிழ் இசை மகாநாடு நடைபெறும். ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைப்பார்கள். கான்பகதூர் பி. கலிபுல்லா சாஹிப்பகதூர் அவர்கள் தலைமைவகிப்பார்கள். புதுக்கோட்டை சீப் ஜட்ஜ் ஸ்ரீ எம். பரமசிவம் பிள்ளை அவர்கள் தமிழ்க் கொடியை ஏற்றுவார்கள். ஸ்ரீமான்கள் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள், வித்வான் ஜீ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், வித்வான் வினைதீர்த்தான் செட்டியார் அவர்கள், வித்வான் விசு. திருநாவுக்கரசு அவர்கள், கிருபானந்த வாரியார் அவர்கள் முதலியோர் சொற்பொழிவாற்றுவார்கள். இசையரசு தண்டபாணி தேசிகர் அவர்கள், சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், எம். கே. தியாகராஜ பாகவதர் அவர்கள், அருட்கவி மாரியப்ப சுவாமிகள் முதலியோர் மகாநாட்டில் இனிய இசை விருந்து ஊட்டுவார்கள்.

## பர்மாவிலிருந்து வெளியேறி வந்தோர் சங்கம்

திருச்சி, பாலக்கரையிலிருக்கும் பர்மாவிலிருந்து வெளியேறியவர் சங்கக் கூட்டமொன்று செப்டம்பர் 28உ ஸ்ரீ M. K. ஐயர் தலைமையில் கூடி, பர்மாவிலிருந்து வெளியேறியதன் காரணமாக இந்தியர் அங்கு இழந்த நிலம், கட்டிடம் வகையறாச் சொத்துக்கள், வியாபாரம் முதலியவைபற்றிய புள்ளி விவரங்களைச் சேகரித்து சர்க்காருக்கு அனுப்புவதென்றும், தகுந்த மாணவர்கட்கு இலவசமாகக் கல்வி வசதியளிக்கும்படி பள்ளிக் கூடங்களின் தலைமை ஆசிரியர்களையும் மானேஜர்களையும் கேட்டுக் கொள்ளுமாறு சர்க்காரைக் கேட்டுக் கொள்வதென்றும் தீர்மானிக்கப்பட்டதாகக் காரியதரிசி அறிவிக்கிறார்.

## காய முறுபவருக்கு நிவாரணம்

யுத்தத்தில் காயமுறுபவர்களுக்கு நல்ல உதவி சீக்கிரம் கிடைக்குமாறு செய்யவும், அவர்கள் இறந்து போனால் அவர்களுடைய குடும்பத்தார்க்கு உதவி அளிப்பதற்காகவும், ஒவ்வொரு இனத்திலும் யுத்தத்தில் காய முறுவோருக்காக முதலாளிகள் சகாயமளிக்கும் திட்டப்படி ஒவ்வொரு இனத்திலும் ரூ 50 அட்வான்ஸ் கொடுக்கலாமென்று இந்திய சர்க்கார் தீர்மானித்திருக்கின்றனர். அவ்வாறு அட்வான்ஸ் அளித்த முதலாளிக்குப் பாதித் தொகைக்கு மேற்படாமல் சர்க்கார் மாதத் தவணைகளில் கொடுப்பார்கள். பாத்திரமாக இருப்பவர்களுக்கு மாகாணத்தில் நிவாரணம் அளிக்கலாம் என்பதற்காகவே இம்மாதிரி இந்திய சர்க்கார் முடிவு செய்திருப்பதாகப் புது டில்லிச் செய்தி கூறுகிறது.

## ரூஸ்வெல்ட் மனைவியின் லண்டன் விஜயம்

ஜனாதிபதி ரூஸ்வெல்டின் மனைவி சமீபத்தில் லண்டனுக்கு விஜயம் செய்வாரென்று தெரிகிறது.

## இந்தியப் பிரச்னையில் மத்தியஸ்தம்

### "வாஷிங்டன் போஸ்ட்" கோரிக்கை

"வாஷிங்டன் போஸ்ட்" அமெரிக்க சர்க்காருடன் நெருங்கிய தொடர்பும் விசேஷச் செல்வாக்கும் கொண்ட பத்திரிகை. இந்தியப் பிரச்னை சம்பந்தமாக ஒரு சமரசம் விளைவிப்பதில் சீன, அமெரிக்க உதவி அவசியமென அப்பத்திரிகை எழுதியிருக்கிறது. இந்தியாவுக்கு உறுதி கூறுவதால் மட்டும் பலனில்லை யென்றும், உருவான நடவடிக்கை யெடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இரண்டாவது முக்கிய நகரமான கல்கத்தாவை விமானப்படை யெடுப்பினின்றும் காப்பதற்கான முஸ்தீபுக்கு அறிகுறிகள் காணவேண்டு மென்றும், "நமது யுத்த நோக்கங்களுக்கும் சமாதான லட்சியங்களுக்கும் இந்தியா ஒரு உரைகல்லாக இருக்கிறது" என்றும், இந்தியாவில் யுத்த காலத்திற்கான ஒரு ஏற்பாட்டை விளைவிப்பதில் பிறருக்கும் சிரத்தை உண்டென்ற கொள்கையைப் பிரிட்டிஷார் அங்கீகரிக்க வேண்டுமென்றும், இதில் இயற்கையாக மத்தியஸ்தம் செய்யக் கூடிய நாடுகள் சீனவும் அமெரிக்காவுந்தான் என்றும் "வாஷிங்டன் போஸ்ட்" எழுதியிருக்கிறது.

## ஸ்டாலின்கிராடுப் போர்

### ஒரு பகுதி எதிரிவச மானது

ஸ்டாலின் கிராடில் உக்ரமான போராட்டத்திற்குப் பிறகு ஜர்மானியர் நகரின் ஒரு பகுதியைப் பிடித்து விட்டதாகக் கடைசியாக வெளிவந்த ஸோவியத் அறிக்கை கூறுகிறது. காகஸஸில் ரஷ்யர் 2 ஊர்களைக் காலி செய்திருக்கின்றனர்.

பால்டிக்கில் சோவியத் சப்மரீன்கள் மொத்தம் 36,000 டன் எடையுள்ள 5 ஜெர்மன் துருப்புக் கப்பல்களை மூழ்கடித்திருக்கின்றன.

ஏராளமாக ஆட்களையும் தளவாடங்களையும் இழந்த போதிலும் வால்கா நதிக்கரையில் பல மைல் தூரம் பரவியுள்ள ஸ்டாலின் கிராடு நகரின் கைத்தொழிற் பிரதேசத்தில் மற்றும் சில கட்டிடங்களை ஜர்மானியர் பிடித்ததாக மாஸ்கோச் செய்தி கூறுகிறது. 4 மணி நேரத்தில் ஜெர்மானியர் 46 டாங்கிகளை இழந்தனர். 5,000 ஜெர்மானியர் கொலையுண்டனர்.

தேச நலத்தைக் கருதி மஞ்சுகோ—சைபீரிய எல்லையில் கண்டிப்பான கட்டுப்பாடுகள் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருப்பதாக டோக்கியோ ரேடியோ கூறுகிறது.



## "பாப்பா மலர்" ஆபீஸ் திறப்பு விழா

ராயவரத்தில் குழந்தைகளுக்கென திரு. முத்து. நாராயணன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவரத் தொடங்கியிருக்கும் "பாப்பா மலர்" என்னும் திங்கள் வெளியீட்டின் ஆபீஸ் திறப்பு விழா 19-10-42ல் திரு. சுப. முத்துராமன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீமான்கள் S. நடேசய்யர் B. A., L. T., V. M. நாயகம், இரா பாலன் ஆகியோர் பத்திரிகையின் அவசியம் பற்றிப் பேசினார்கள்.

## அமெரிக்க ராணுவ விமானம் நொறுங்கியது

புது மெக்ஸிகோவிலுள்ள ஸிராமலையுச்சி மீது ஒரு ராணுவ விமானம் மோதி நொறுங்கியதால் 11 பேர் உயிரிழந்ததாக டெல் மாயின்ஸ் செய்தி கூறுகிறது.

## இந்தியப் படை

தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களைக் கொண்ட படையொன்று அமைக்கப்பட்டபோவதாகப் பிரிட்டோரியாச் செய்தி கூறுகிறது. இந்தியர்களுக்குத் தனி அணி ஒன்றிருக்க வேண்டுமென்பதே இதன் உத்தேசம். 17 க்குமேல் 50 வரை வயதுடைய இந்தியர் அனைவரும் இதில் சேரலாம்.

## பிரிட்டன் மீது குண்டு வீச்சு

அக்டோபர் 19உ காலை லண்டனில் மும்முறை விமானப் படையெடுப்பு எச்சரிக்கை செய்யப்பட்டது. ஒரு பிரிட்டிஷ் நகரில் குண்டு வீச்சால் பல தொழிலாளர் வீடுகள் அழிந்தன. பாதுகாப்பு அறைகளை நோக்கி ஓடிய பெண்கள் மீது பீரங்கிப் பிரயோகம் செய்யப்பட்டது. இரு ரயில்கள் மீதும் பீரங்கிப் பிரயோகம் செய்யப்பட்டதாம்.

## ஜெனரல் ஆக்கின்லக்

ஜெனரல் ஸர் ஆக்கின்லக் புதுடில்லி வந்திருக்கிறார். அவர் பம்பாய் கவர்னராக நியமிக்கப்படலா மென்றும், பம்பாய் கவர்னராக இருக்கும் மே. த. லம்லி வைஸ்ராயாக நியமிக்கப்படலா மென்றும் வதந்திகள் உலாவுகின்றன.

## மாஜிஸ்திரேட் வீட்டில் கல்லெறி

ஆமதாபாத், கௌரவ மாஜிஸ்திரேட் ராவ்சாகிப் குமான் சிங் ஜீவன் சிங் வீட்டில் கல்லெறியப்பட்டதாயும், அவரது மோட்டார் லாயத்துக்குத் தீவைக்கப்பட்டதாயும், வருமான வரி ஆபீஸ் பியூன் தாக்கப்பட்டு, அவரிடமிருந்த நோட்டீஸ்கள் கைப்பற்றப்பட்டதாயும் ஆமதாபாத் செய்தி கூறுகிறது.

மதிப்புரை

## கோசலைச் செல்வன்

[ஆசிரியர்: ஸ்ரீ ப. நீலகண்டன். வெளியிட்டோர்: கலைவாணிக் கழகம், செட்டிநாடு. பக்கம் 74. விலை 0-12-0. தபால் செலவு வேறு.]

இது கம்பராமாயணம் பாலகாண்டத்திலிருந்து 56 கவிகள் பொறுக்கப்பட்டு அவற்றிற்கு அரும்பத உரை, குறிப்புகளுடன் வெளியிடப்பட்டுள்ள புத்தகமாகும். கம்பனை எத்தனை மாதிரியாக எத்தனை பதிப்புக்கள் வெளியிட்டாலும் நன்றேயாம். கம்பன் நூல் சிதைவுற்ற மாதிரியும், அது பட்டு வரும் பாடும் லேசானதல்ல. இந்தப் பதிப்பாசிரியர் புதிய முறையைத் தழுவி எழுத்துப் பிழையின்றி வெளியிட்டிருக்கிறார். இப்படிப் பல பதிப்புக்கள் எழுந்த பிறகுதான் சுத்தமான பதிப்பொன்று பிழைத்தெழ முடியுமென்பது நமது நம்பிக்கை. துணிந்து ஒரு பதிப்பை வெளியிட முன்வந்த இதன் ஆசிரியரின் முயற்சி குறிப்பிடத்தக்கது. உயர்ந்த காகிதத்தில் நல்ல மாதிரியில் புத்தகம் உருவாகி யிருக்கிறது. அட்டையிலுள்ள வர்ணப்படம் கண்ணைக் கவர்ந்து நிற்கிறது. புதிதாகக் கம்ப ராமாயணம் பயில விரும்புவார்க்கு இது உதவியாக இருக்கும். இளைஞர்கள் வாங்கிப் படிப்பார்களென்று நம்புகிறோம்.

## லண்டனில் ஜெனரல் ஸ்மட்ஸ்

தென்னாப்பிரிக்காப் பிரதம மந்திரி மார்ஷல் ஸ்மட்ஸ் லண்டனுக்கு விஜயஞ் செய்து மிஸ்டர் சர்ச்சிலுடன் சம்பாஷணை நடத்தி வருகிறார். மத்திய கிழக்கிலும் மத்தியதரைக் கடலிலும் நேசக் கட்சியின் எதிர்த்தாக்குதல் ஆரம்ப மாகலாமென ஊகிக்கப்படுகிறது.

### 'இந்திய நெருக்கடியைத் தீர்த்துவைக்கலாம்'

காந்திஜியின் அரிய நண்பரான ஜெனரல் ஸ்மட்ஸ் இந்திய-பிரிட்டிஷ் நெருக்கடியைத் தீர்த்துவைக்கும்படி கேட்டுக்கொள்ளப்படலாமென்று லண்டனில் ஒரு அபிப்பிராயம் இருந்துவருகிறதாம்.

## போடி ஜமீன் வழக்கு

போடிநாயக்கனூர் ஜமீன் வார்சுரிமை சம்பந்தமாக நடைபெற்று வரும் வழக்கின் ஹியரிங் மதுரை ஜில்லாக் கோர்ட்டில் அக்டோபர் 15உ முடிவு பெற்று தீர்ப்புக்காகக் கேஸ் ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. காலஞ் சென்ற ஜமீன்தார் ஸ்ரீ காமராஜ பாண்டிய நாயக்கர் சென்ற பிப்ரவரி 16உ ஆண் குழந்தையின்றி இறந்து போனார். அவரது விதவை ஸ்ரீமதி வீரலட்சுமி அம்மாளும், ஜமீன் குடும்பத்தில் 4-வது கிளைப் பிரதிநிதியான குலசேகர பாண்டிய நாயக்கரும், 3-வது கிளைப் பிரதிநிதியான ராஜய்ய நாயக்கரும் வார்சுரிமை கொண்டாடினர். ஜமீன்தார் தமது தகப்பன் வழி சுற்றத்தாருடன் பாகஞ் செய்து கொள்ளாததால் அவரது மனைவிக்கு உரிமையில்லை யென்று சொல்லி உசிலம்பட்டி ரெவினியூ டிவிஷனல் ஆபீசர் ஸ்ரீ குலசேகர பாண்டிய நாயக்கரே சரியான வார்சு எனப் பதிவு செய்தார். ராஜய்யாவின் பாட்டனார் சுந்தரபாண்டிய நாயக்கர் தம்முடையவும் தமது பின் சந்ததியாருடையவும் உரிமையை 1890ல் விடுதலை யெழுதிக் கொடுத்து விட்டதால் ஸ்ரீ ராஜய்யாவுக்கு உரிமையில்லை யென்று சொல்லப்பட்டது. இந்த நிலைமையில் தான் மேற் சொன்ன வழக்குத் தொடரப்பட்டது.

## சர்க்கரை சப்ளை

இந்திய சர்க்கார் சர்க்கரைக் கண்ட்ரோலர் ஸ்ரீ மேத்தா இன்று சென்னை வருகிறார். சர்க்கரை விநியோகம் பற்றி அவர் பலருடனும் கலந்து பேசுவார். சென்னைக்குப் போதிய சர்க்கரை அனுப்ப அனுமதி கொடுத்திருப்பதாயும், போக்கு வரத்து வசதிக் குறைவு காரணமாகவே அனுப்பவில்லை யென்றும், தற்போது போக்கு வரத்து வசதியிருப்பதால் அதிக சர்க்கரை அனுப்ப ஏற்பாடு செய்யப்படுவதாயும் இந்திய சர்க்கார் தென் இந்திய வியாபார சபைக்குப் பதிலளித்திருப்பதாகத் தெரிகிறது.



## வைஸ்ராய் நிர்வாக சபை

"வைஸ்ராய் நிர்வாக சபையில் இன்னும் ஆங்கிலேயர் வகித்து வரும் மூன்று பதவிகளுக்கும் இந்தியரை நியமிப்பதன்மூலம் அச் சபையை முற்றிலும் இந்திய மயமாக்கும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா?" என காமன்ஸ் சபையில் இந்தியா மந்திரியை ஒரு அங்கத்தினர் கேட்டபோது "இப்போது அத்தகைய உத்தேசம் ஏதுமில்லை" யென்று பதிலளித்தார். "மேற் குறிப்பிட்ட முறையில் இந்தியா மந்திரி நடவடிக்கை யெடுத்துக் கொண்டால், அதற்குப் பெருவாரியான இந்தியர்களின் அங்கீகாரம் கிடைக்கு மென்பதை அவர் உணர்ந்திருக்கிறாரா?" என்று மிஸ்டர் ஸாண்டர் என்ற லிபரல் கட்சி மெம்பர் கேட்டபோது இந்தியா மந்திரி பதிலளிக்கவில்லை.

## தேவஸ்தானக் கமிட்டிக்கு நாடார் சமூக மெம்பர்

மதுரை ஸ்ரீ மீனாட்சி தேவஸ்தான ஆலோசனைக் கமிட்டி மெம்பராக நாடார் சமூகத்திலிருந்து முதன் முதலாக நியமிக்கப்பெற்றிருக்கும் ஸ்ரீ பி. எம். பாண்டிய நாடாரை டி சமூகத்தார் டி தேவஸ்தான நிர்வாக அதிகாரி ஸ்ரீ ஆர். எஸ். நாயுடு தலைமையில் கூடி அக்டோபர் 11உ பாராட்டினர்.

## அண்ணாமலை சர்வகலாசாலை வைஸ் சான்ஸலர்

### ஸ்ரீ ரத்னசாமி நியமனம்

பப்ளிக் சர்வீஸ் கமிஷன் அங்கத்தினராயிருந்த ஸ்ரீ எம். ரத்னசுவாமி அண்ணாமலை சர்வகலாசாலையின் உப அத்யக்ஷகராக நியமிக்கப்பெற்றிருக்கிறார்.

## இந்தியாவில் இலங்கைப் பிரதிநிதி

இலங்கை சர்க்காரின் பிரதிநிதியாக இந்தியாவில் இருக்க, இலங்கை ராஜாங்க சபையின் முதல் மெம்பர் ஸர் பாரன் ஜயதிலகா நியமிக்கப்பெற்றிருக்கிறார்.

## கரிவாயு கார்களுக்கு அதிக வரி இல்லை

சொந்தக் கார்களில் கரிவாயு யந்திரத்தை அமைப்பதால் மோட்டாரின் எடை அதிகரித்த போதிலும் அதற்காக அதிக வரி விதிக்கக் கூடாதென்று சென்னை சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர்.

## ஹாங்காங் விஷயம்

சீனாவிலுள்ள பிரிட்டிஷ் பாத்தியதைகளை விட்டுக் கொடுப்பதில் சீனாவுக்கு ஹாங்காங்கைத் திருப்பிக் கொடுக்கும் விஷயம் சேர்ந்ததில்லை யென்று பிரிட்டிஷ் அயல் நாட்டு உதவி மந்திரியான ரிச்சர்ட் லா காமன்ஸில் தெரிவித்தார்.





## அரேபியக் கடலில் எதிரி நீர்மூழ்கிகள்

### இந்தியக் கடற்படையின் துரிதமான அபிவிருத்தி

சென்னைக் கடற்படைக் காரியாலயத்தில் நடைபெற்ற பத்திரிகைப் பிரதிநிதிகள் கூட்டத்தில் இந்தியாவின் பாதுகாப்பு ஏற்பாடுகள்பற்றிப் பேசும்போது இந்தியக் கடற்படைத் தலைவர் அட்மிரல் ஸர் ஹெர்பர்ட் பிட்ஸ்ஹெர்பர்ட், இந்தியாவின் பாதுகாப்பு ஏற்பாடுகள் இயன்ற அளவு நன்றாக இருக்கின்றன வென்றும், தினமும் பலப்படுத்தப்பட்டு வருவதாயும், கடற்படைக்குத் தென் இந்தியாவில் அதிகமாக ஆள் சேர்ந்து வருவதாயும் குறிப்பிட்டிருக்கிறார். அவர் மேலுங் கூறியதாவது:—

இந்தியக் கடல்களில் கப்பல்கள் மூழ்கடிக்கப்படுவது உண்மையே. ஆனால் நஷ்டத்தை ஈடு செய்வதற்கு அதிகப்படியாகவே புதிய கப்பல்கள் கட்டப்படுகின்றன. நமது பாதுகாப்பு ஏற்பாடுகள் தினம்தினம் அதிகரிக்க அதிகரிக்க, நமது கப்பல் நஷ்டமும் குறைந்து வரும்.

அரபிக் கடலில் நமக்குக் கொஞ்சம் நஷ்டம் ஏற்பட்டது. யுத்த முடிவுக்குள் இந்த நஷ்டம் அதிகரிக்கவும் செய்யலாம். ஆனால், எதிரி சப்மரீன்களை முற்றிலும் ஒழித்துவிட முடியாது. எனினும் ஜப்பானியர் தம் நடவடிக்கையால் பயனில்லை யென்று உணரும் வரை அவர்கள் சப்மரீன்களை விரட்டியடிப்போம்.

ஒவ்வொரு வருஷமும் சுமார் 600 கோடி ரூபா மதிப்புள்ள வியாபாரம் கடல் வழி நடைபெறுகிறது. வியாபாரத்தைப் பொறுத்த மட்டில் இந்தியாவை ஒரு தீவென்றே நான் கருதுகிறேன். வடக்கே இமய மலைக்கு மேலே வியாபாரம் ஒன்றும் நடத்துவதற்கில்லை. ஆகவே கடற்படையின்றி இந்தியா காலந்தள்ள முடியாது. ஒரு சமயம் இந்தியாவுக்குச் சொந்தக் கடற்படை வைக்க முடியாதென்று கருதப்பட்டது; அதனால் தனக்காக அது ராயல் கடற்படையின் உதவியை எதிர்பார்த்தது. இப்போது தன் சொந்தக் கடற்படையை நம்பி நிற்கும் காலம் வந்துவிட்டதென நான் எண்ணுகிறேன்; இது சம்பந்தமாக ஏற்படும் செலவை இந்தியா கருத முடியாது.

கத்தியவாரில் புதிய டார்பிடோ பள்ளிக்கூட மொன்று ஆரம்பிக்கப் போகிறோம். அது ஆரம்பமானபின், இந்தியக் கடற்படை உலகிலுள்ள மற்ற கடற்படைகளுக்குச் சமானமானதாகும். கப்பல் கட்டும் வேலையும் துரிதமாகவே நடைபெற்று வருகிறது. கப்பலோட்டும் யந்திரங்கள் புதிதாக இந்தியாவிலேயே செய்யப்படுகின்றன. இந்திய கடற்படைக்கு ஆள் திரட்டுவதில் ஆண், பெண் வித்தியாசம் காட்டப்படுவதில்லை; பல பெண்களும் சேர்ந்து திறமையாக வேலை செய்து வருகின்றனர்.

கானடாப் பெண்கள் போர்க் கருவிகள் தயாரிக்கும் வேலையில் திறமைசாலிகளாக விளங்குகின்றனர். ஒரு தொழிற்சாலையில் பெண்கள் பீரங்கி குண்டுகளைப் பரிசோதனை செய்யும் காட்சியை மேலே உள்ள படத்தில் காணலாம்.

## அவள் இடுப்பினளவு 9 அங்குலம் சிறுத்தது



## ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் தேர்ந்தெடுக்கப்பட்டார்

தஞ்சை திருச்சித் தொகுதிக்கு மத்திய அஸம்பிளிக்கு நடைபெற்ற உபதேர்தலுக்கு சென்னை அஸம்பிளி மெம்பர் ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரும், ஸ்ரீ N. கந்தசாமிப் பிள்ளையும் நியமனப் பத்திரங்கள் தாக்கல் செய்ததில், ஸ்ரீ கந்தசாமிப் பிள்ளை, விதிப்படி தமது தேர்தல் ஏஜண்டு யார் எனக் குறிப்பிடாததால் அவரது நியமனப் பத்திரம் நிராகரிக்கப்பட்டது. எனவே ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியாரே தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது.

## பிரிட்டிஷ் தபால் ஊழியர்கள்

பிரிட்டிஷ் தபால் இலாகாவில் 2½ லட்சம் பேருக்கு மேல் ஆண்களும் பெண்களும் வேலை பார்க்கின்றனர். இவரில் மூன்று பேருக்கு ஒருவர் வீதம் யுத்த சேவையில் சேர்ந்திருக்கின்றனர்.

## தண்ணீரில் சிக்கனம்

புதிய யந்திரங்களும் புதிய யந்திர பாகங்களும் கிடைப்பதில் ஏற்பட்டுள்ள கஷ்டங் காரணமாக தண்ணீர் சப்ளை செய்யப்படும் நேர அளவைக் குறைக்கும்படியும், அனாவசிய காரியங்களுக்குத் தண்ணீர் உபயோகிப்பதைத் தடுக்கும்படியும் சென்னை சர்க்கார் கார்ப்பரேஷனையும் இதர ஸ்தல ஸ்தாபனங்களையும் கேட்டிருக்கின்றனர்.

## ரப்பர் மரம்

அமெஸான் வனங்களில் 30 கோடிக் கதிகமான ரப்பர் மரங்க ளிருக்கின்றன

## காரைக்குடி நகர சபைக் கூட்டம்

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று சென்ற சனிக்கிழமை மாலை 4-30 மணிக்கு "காந்தி மாளிகை"யில் நடைபெற்றது. 9 அங்கத்தினர்கள் வந்திருந்தனர். சேர்மனும் வைஸ் சேர்மனும் வராததால், திரு. டி. பார்த்தசாரதி ஐயங்காரைத் தலைமை வகிக்கும்படி திரு. வெ. சுப. சுப்பையா அம்பலம் பிரேரிக்க, திரு. சி. மு. அரு. அருணசலம் செட்டியார் ஆமோதிக்க, திரு. பார்த்தசாரதி ஐயங்கார் தலைமை வகித்தார். அன்றையக் கூட்ட நடவடிக்கைகளில் பைசல் செய்யப்பட்ட முக்கிய விஷயங்கள் வருமாறு:-

1937-ம் வருடத்திய துணி விற்பனைச் சட்டத்தை அமுல் நடத்துவதைக் கமர்ஷியல் இலாகாவுக்கு மாற்றியிருப்பதாகத் தெரிவித்துள்ள சர்க்கார் உத்தரவு ரிக்கார்டு செய்யப்பட்டது.

எலக்டிரிக் சங்கை விலைக்குக் கொடுக்கும்படி கேட்டுள்ள மதுரை ஜில்லாக் கலக்டரின் கடிதத்திற்கு, ஏற்கனவே கவுன்சில் தீர்மானப்படி வாடகைக்கே கொடுப்பதென்றும், விற்க முடியாதென்றும் பதில் எழுதுவதென முடிவு செய்யப்பட்டது.

முத்தாளம்மன் முனிசிபல் மார்க்கட்டில் கசாப்புக் கடைகள் கட்டவும் மார்க்கட் இடத்தை விலைக்கு வாங்கவும் ரூ 20,700, ஸ்லாட்டர் ஹவுசைத் திருத்திக் கட்ட ரூ 6,200 ஆகிய இரு தொகைகளையும் சர்க்காரிடம் கடனாகக் கேட்டு நிர்வாக அதிகாரி அனுப்பியுள்ள மனுக்கள் அங்கீகரிக்கப்பட்டன. (கசாப்புக் கடைகள் கட்டும் விஷயமாக உள்ள மனு விஷயத்தில் திரு. சுப்பையா அம்பலம் கலந்து கொள்ளவில்லை). முத்துப்பட்டணம் ஆண் பள்ளிக்கூடக் கட்டிடத்திற்காகவுள்ள எஸ்டிமேட் தொகையில் பாதியைக் கடனாகவும் பாதியை நன்கொடையாகவும் சர்க்காரிடம் கேட்பதற்குரிய மனுவும், வீதிகளின் மூலைகளைத் திருத்துவதற்காக சர்க்காரிடம் ரூ 23,800 கடன் கேட்பதற்குரிய மனுவும் அங்கீகரிக்கப்பட்டன.

ஹரிஜன விடுதி வகையரு கட்டுதற்காக வாங்கப்பட்ட கடனில் மீதியுள்ள தொகை ரூ 1849-4-0ம் சர்க்காரிடம் வாபஸ் செய்யப்பட்டது அங்கீகரிக்கப்பட்டது.

இன்னும் சில மாமூலான விஷயங்கள் பரிசீலனை செய்யப்பட்டு, அஜண்டாவில் குறிப்பிட்டுள்ள 883-வது எண் முதல் உள்ள இதர விஷயங்கள் மறு கூட்டத்திற்கு ஒத்திவைக்கப்பட்டன. இத்துடன் 7 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

### ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமைச் சட்டம்

1937-ம் வருடத்திய ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமைச் சட்டமும், 1938-ம் வருஷத்திய ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமைச் சட்டத் திருத்தமும் விவசாய நிலங்களுக்கும் செல்லுபடியாகும்படியாகப் பம்பாய் கவர்னர் ஒரு சட்டமியற்றியிருக்கிறார்.

### டாக்டர் சுப்பராயன் புதல்வர் யுத்தக் கைதி

டாக்டர் பி. சுப்பராயனின் புதல்வர் மேஜர் குமாரமங்கலம் தற்சமயம் இத்தாலியர்களிடம் யுத்தக் கைதியாக இருப்பதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.



An R.I.N. ship in north Atlantic waters



## குண்டு வீசும்போதே படம் பிடித்தல்

பிரிட்டிஷ் விமானங்களின் வெடி வீச்சு குறி தவறுமல் பலிப்பதற்கு இரவில் போட்டோ பிடிக்கும் விஷயமாய் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தி ஒரு காரணமாகும் என்று "சண்டே டைம்ஸ்" கூறுகிறது. இதற்கு முன் தாக்குதல் பற்றிச் சொற்பமாகத்தான் படங்கள் எடுக்கப்பட்டன. இப்போதோ 5 கோடி 'காண்டில் பவர்' உள்ள மின்னல் வெடிகளின் கண் பறிக்கும் வெளிச்சம் ஜெர்மன் மக்களுக்குச் சகஜமாய்ப் போயிருக்கும். ஒரு இலக்கைப்பற்றிச் சரியான படம் கிடைத்துவிட்டதென்றால் இலக்கு தாக்கப்பட்டதென்பதில் சந்தேகமே வேண்டியதில்லை. விமானத்திலிருந்து வெடிகுண்டு விழும்போது கூடவே போட்டோ வெளிச்ச வெடியும் விழுகிறது. கண்ணைக் குருடாக்கும் வெளிச்சத்தைக் கக்கிக்கொண்டு அது வெடிக்கிறது. ஒரு விநாடியில் பத்திலொரு பங்கு காலம் இந்த வெளிச்சம் இருக்கிறது. அதற்குள்ளே அந்த வெளிச்சம் பரவியுள்ள பிரதேசத்தைக் காமரா படமெடுத்துவிடுகிறது.

சில விநாடிகள் விமானத்தை ஒரு மட்டமாய் வைத்திருக்க வேண்டும்; அவ்வளவுதான் வேண்டியது. இப்போதும் சில சமயங்களில் தவறு நேரலாம். உதாரணமாக மேகங்களுக்கிடையிலுள்ள இடைவெளியை நம்பி வேலை செய்தால் வெறும் மேகஜாலங்களே படத்தில் விழுந்துவிடலாம். அல்லது அந்த நெருக்கடியான நேரத்தில் விமானத்தைச் சரியானபடி மட்டத்தில் வைக்க முடியாதுபோகலாம். அப்போது காமரா வேறு எந்தப் பக்கமாவது திரும்பிக்கொண்டிருக்கும். இந்தப் படங்கள் விமானம் செலுத்தும் வழியைக் காட்டவும், விசித்திரமான உரு மயக்க மேதாகிலும் செய்திருந்தால் அதை வெளிப்படுத்தவும் உதவுகின்றன. தாக்குதல் எவ்வளவு தூரம் பலித்ததென்பதையும் இவற்றிலிருந்து உணரலாம். முதல் படத்தில் சாவிடங்களில்தான் தீ தெரியலாம். சில விநாடிகட்கெல்லாம் இவை 20 ஆகலாம். அப்புறமோ இலக்கு முழுவதுமே ஜோதிமயமாய்விடலாம்.

### புதிய முறையில் ரப்பர் தயாரிக்க

தற்போது ஏற்பட்டுள்ள ரப்பர் தட்டுப்பாட்டினால், ரப்பர் மாமல்லாத வேறு செடிகளிலிருந்து ரப்பர் தயாரிப்பது பற்றிச் சென்னை சர்க்கார் பரிசோதனைகள் நடத்தி வருவதாகத் தெரிகிறது. பல செடிகளின் சாறுகளை யெடுத்துப் பரீட்சைகள் நடத்தப்படுகின்றன.

### யு. கே. ஸி. ஸி.

யுனைடெட் கிங்டம் கமர்ஷியல் கார்ப்பரேஷனின் அலுவல்கள் சம்பந்தமாக இந்திய சர்க்கார் பிரிட்டிஷ் சர்க்காருக்கு எழுதியிருப்பதாகப் புது டில்லிச் செய்தி கூறுகிறது. இந்த ஸ்தாபனம் நிரந்தரமானதாக இருக்கக் கூடாதென்றும், யுத்தம் தீர்ந்தவுடன் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் அது தன் அலுவல்களை நிறுத்திக் கொள்ள வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

### அமெரிக்காவில் ஸன் யாட் ஸென் சிலை

வாஷிங்டனில், சீனக் குடியரசு ஸ்தாபகரான டாக்டர் ஸன் யாட் ஸென்னுக்கு ஒரு உருவச்சிலை நாட்டத் திட்டமிடப்படுகிறது. அவரது வாழ்க்கையை ஆதாரமாகக்கொண்டு தயாரிக்கப்படப் போகும் சினிமாப் படத்தின்மூலம் கிடைக்கும் வருமானத்திலிருந்து இச்சிலை நாட்டப்படும். இந்தப் படத்தில் பால் முனி ஸன் யாட் ஸென்னுக நடிப்பார்.

### ஹெய்னனில் கோட்டை

இந்தோ சீனுவுக்கு எதிரிலுள்ள ஹெய்னன் தீவின் தென்கோடியில் ஜப்பானியர் துரிதமாகக் கோட்டைகளைக்கட்டிவருவதாயும், அதை ஒரு கடற்படைத் தளமாக்கி வருவதாயும் சுங்கிங் செய்தி கூறுகிறது.



## இந்தியாவில் தொழில் அபிவிருத்தி

இந்தியாவின் தளவாட உற்பத்தி அதி வேகமாகப் பெருகிக்கொண்டே வருகிறது. ஆகஸ்டு மாதத்தில் பீரங்கிக் குண்டுகள், வெடி குண்டுகள், வெடி மருந்துகள், சனியன்கள், தோட்டாக்கள் முதலிய 17 புதிய ரகங்களும் புதுமாதிரியான எஃகுக் கலவைகளும் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டன.

கிடைக்கும் உள்நாட்டுப் பொருள்களைத் தக்க முறையில் பெருத்த அளவில் உபயோகப்படுத்துவதற்கான முறைகளைக் கண்டுபிடிப்பதிலேயே, விஞ்ஞானிகளும் ஆராய்ச்சியாளர்களும் முன்வந்திருக்கின்றனர். அதிவேகக் கருவிகளும், உயர்ந்த ரக எஃகும் செய்வதற்கு இப்பொழுது அனுஷ்டிக்கப்பட்டுவரும் புதிய முறையால் இரும்புக் கலவைகள் மிச்சமாகின்றன. ரப்பர் தொழிலுக்கு இதுவரை எண்ணெய் வயல்களிலிருந்து கிடைத்துவந்த ஒருவித எண்ணெயை உபயோகித்துவந்தார்கள். இப்போது இந்தியாவிலே கிடைக்கும் பென்ஸாலை உபயோகித்துவருகின்றனர். தளவாட உற்பத்தி வேலைகளுக்குத் தேங்காய் எண்ணெய் இப்பொழுது அதிகம் உபயோகிக்கப்பட்டு வருவதால் சுமார் 9,000 காலன் 'ஸ்பெர்ம்' எண்ணெய் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வது நிறுத்தப்பட்டுவிட்டது.

அமெரிக்க யந்திரங்களை எதிர்பார்த்துத் தென்னிந்தியாவில் ஒரு புதிய மரம் அறுக்கும் ஆலைக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்தியாவின் இரும்புத் தொழிற்சாலை ஒன்றில் தகடு உற்பத்தி ரூ 35 லட்சம் செலவில் கிட்டத்தட்ட அரை மடங்கு அதிகரிக்கப்பட்டிருக்கிறது. கப்பல்கள் கட்டுவதற்கும், பழுது பார்ப்பதற்கும் தேவையான இரும்புத் தகடுகளும், குண்டு துளைக்க முடியாத கவசத் தகடுகளும் பூராவும் இந்த ஆலையில்தான் உற்பத்தியாகின்றன. இந்தியாவின் எஃகுத் தொழிலபிவிருத்தி யுத்தத்துக்குப் பிறகு ஏற்பட்டுள்ள அபிவிருத்திகளில் மிகவும் விசேஷமானதாகும்.

### ராணுவத்திற்கு யோசனைகள் தேவை

இந்தியா ராணுவம் அபூர்வ யோசனைகளைக் கூறுபவருக்குக் கைமேல் காசு கொடுக்கத் தயாராயிருக்கிறது.

சமீபகாலம் வரையில் ஆயுதங்கள் முதலியவற்றைப் புதிதாய்க் கண்டுபிடித்துச் சொல்பவர்களுக்குப் பணங் கொடுப்பது யுத்தம் முடியும் வரை ஒத்திப் போடப்பட்டிருந்தது. இப்பொழுது இது மாற்றப்பட்டுவிட்டது. ஏற்றுக்கொள்ளப்பட்ட சகல புது விஷயங்களுக்கும் தற்காப்பு சர்வீசுகளுக்காக அவைகளின் உற்பத்தி ஆரம்பித்த உடனேயே பணங் கொடுக்கப்பட்டுவிடும். புதிதாய் ஏதேனும் கண்டுபிடித்தவர் யாராயிருந்தாலும் சரி-அவர் பிரபல விஞ்ஞானியானாலும் சரி, சிக்கனமாகக் குடித்தனம் செய்யும் குடும்ப ஸ்திரீயாயிருந்தாலும் சரி இந்திய ராணுவத்திற்குக் கவலையில்லை. அது வேண்டுவதெல்லாம் புதிய யோசனைகள்தாம்.

தென்னிந்தியாவில் உள்ள தோட்டக்காரர் ஒருவர், தம் தோட்டத்தில் இருக்கும் ஒரு வகைச் செடியிலிருந்து வடியும் பிசினைக் கவனித்துத் தாமாகவே சில பரீட்சைகள் செய்துபார்த்தார். பிறகு தம் ஆராய்ச்சியின் முடிவுகளை, விஞ்ஞான, தொழில் ஆராய்ச்சி டைரக்டருக்கு அனுப்பி வைத்தார். இந்தத் தோட்டக்காரர் கண்டுபிடித்த தாவர மெழுகு இப்பொழுது ராணுவ வேலைகளுக்கு மிகவும் பிரயோஜனப்பட்டு வருகிறது. சென்ற 3 மாதங்களில் மொத்தம் 127 ஆலோசனைகள் ராணுவத் தலைமைக் காரியாலயத்தின் சப்ளை-விஸ்தரிப்புக் கமிட்டிக்குச் சமர்ப்பிக்கப்பட்டன. இவைகளில் 71 பொது ஜனங்களிடமிருந்தும், 56 ராணுவஸ்தர்களிடமிருந்தும் கிடைத்தன. இவைகளில் பல ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டன என ராணுவத் தலைமைக் காரியாலய அறிக்கை கூறுகிறது.

### நாணயத்திற்குப் பதில் ஸ்டாம்புகள்

கல்கத்தாவில் செம்பு நாணயங்கள் தாராளமாகக் கிடைக்காததால், காலணு நாணயத்திற்குப் பதில் தபால் ஸ்டாம்புகள் உபயோகிக்கப்படுகின்றனவாம்.





## இந்தியா—பர்மா மசோதா சட்டமாயிற்று

அக்டோபர் 13உ காமன்ஸில் இந்தியா பர்மா (தற்காலிகச் செல்லுறைத் திருத்த) மசோதா சட்டமாக நிறைவேறியது. படைபெடுப்பு நிகழுவது போன்ற சமயங்களில், கொள்ளை, நாசவேலை முதலிய குற்றங்களை விசாரணை செய்ய அவசரக் கோர்ட்டுகளை ஏற்படுத்த இம்மசோதா அதிகாரமளிக்கிறது. இவை விதிக்கும் மரண தண்டனையை, ஹைகோர்ட் ஜட்ஜ் ஒருவர் உள்ளிட்ட விசேஷக் கோர்ட் பரிசீலனை செய்யும், வழக்கம் போல, கருணை காட்டும்படி கோரும் மனுவை வைஸ்ராய்க்கு அனுப்ப வேண்டும். பிரிவி கவுன்சிலுக்கு அப்பீல் செய்யும் உரிமை புதிய திருத்தத்தின் மூலம் ரத்தாகிறது. சென்ற 6 வருஷங்களில் இம்மாதிரி 570 மனுக்கள் அனுப்பப்பட்டதில் 5 மனுக்களுக்கே அப்பீல் செய்ய அனுமதி கொடுக்கப்பட்டது. அவற்றிலும் 2 மனுக்களில்தான் அப்பீலுக்கு இடமிருப்பதாகக் கருதி பிரிவி கவுன்சில் அனுமதித்தது. படைபெடுப்பு அவசரத்தில் இம்மாதிரி மரணதண்டனையை ஊர்ஜிதம் செய்ய 3 அல்லது 4 மாதங்கள் காத்திருப்பது விரும்பத்தக்க தல்லவென்று மிஸ்டர் அமெரி கூறினர்.

### "வெற்றியில் தோல்வி"

எடின்பர்க் நகர சபையில் பேசும்போது மிஸ்டர் சர்ச்சில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

ரிப்பன்டிராப், கோயரிங், ஹிட்லர் ஆகியோர் முன்னைவிட அதிகமாகப் பேசிவருகிறார்கள். அவர்களுடைய பேச்சுக்கள் அனைத்திலும் வழக்கமான டம்ப வார்த்தைகளுடன், அச்சத்தைக் குறிக்கும் தொனிக்கிறது.

தனக்கு வெற்றி கிடைத்தாலும், தனது அதிர்ஷ்டம் மங்க ஆரம்பித்து விட்டது கண்டு ஹிட்லரின் உள்ளத்தில் நடுக்கம் ஏற்பட்டிருக்கிறது. நமது தோல்விகள் இறுதி வெற்றிக்கான படிகளாயும், அவரது வெற்றிகள் இறுதி அழிவுக்கான படிகளாயும் இருப்பது கண்டு அவர் திக்பிரமையடைந்திருக்கிறார். தனக்கு அழிவே ஏற்பட விருக்கையில், தற்காலிகமான வெற்றியைக் கொடுத்துத் தன்னைப் பரிகசித்ததற்காக அவர் அதிர்ஷ்ட தேவதையை நொந்து கொள்கிறார்.

## "பிரிட்டிஷார் செய்த தவறு"

★

### சரியான நடவடிக்கைபற்றி ஸர் ஷஸ்டர் யோசனை

இந்தியாபற்றிக் காமன்ஸ் சபையில் நிகழ்ந்த விவாதங் குறித்து முன் இந்திய சர்க்காரில் வரவு செலவு மெம்பராயிருந்த ஸர் ஜார்ஜ் ஷஸ்டர் லண்டன் "டைம்ஸ்" பத்திரிகைக்கு எழுதியுள்ள கடிதத்தில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

காமன்ஸ் விவாதம் பலனற்ற பேச்சு என்று தாங்கள் எழுதியிருப்பது முற்றிலும் சரி. கலகத்தைத் தடுக்க சர்க்கார் தீவிர நடவடிக்கை யெடுத்துக் கொண்டதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. இதுபற்றிப் பேசுகையில், கிரிப்ஸ் திட்டத்தைக் குலைப்பதுதான் காந்திஜியின் கருத்து என்ற விவாதத்தில் ஏன் மிஸ்டர் அமெரி இறங்கியிருக்க வேண்டும்? காங்கிரஸ் கலகத்துக்காகச் செய்திருந்த முன்னேற்பாடுகளை எடுத்துக் காட்டி ஏன் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கக் கூடாது?

இந்தியாவிலுள்ள முக்கிய தரப்புகள் ஒப்புக்கொள்ளக் கூடிய ஒரு அரசியல் ஏற்பட்டாலன்றி, அரசியல் பொறுப்பு முழுவதையும் இந்திய மந்திரிகளுக்கு மாற்ற முடியாதென்றும், மாற்றினால் குழப்ப மேற்படுமென்றும் சொல்லுகிறோம். அத்தகைய அரசியல் ஏற்படும் வரை நம்மிடமே இறுதியான அரசியல் பொறுப்பும் யுத்த முயற்சியைச் செலுத்துவதற்கான பொறுப்பும் இருக்கக்கூடிய முறையில் ஒரு உண்மையான இந்திய சர்க்கார் ஏற்பட வேண்டுமென்பதே நமது விருப்பமென்று நாம் சொல்லுகிறோம். இந்நோக்கங்களை நாம் இப்போது நிறைவேற்றிவரும் முறைபற்றித் திருப்தியடையக் கூடுமா? வைஸ்ராய் சபையில் உள்நாட்டிலாகா, வரவு செலவு இலாகா ஆகிய இரு முக்கிய இலாகாக்களும் பிரிட்டிஷ் அதிகாரிகள் வசம் இருந்து வருகின்றன. இந்நிலைமை நீடிப்பது அவசியமா?

மலேயாவையும் சிங்கப்பூரையும் இழந்ததற்கு, பேர்ல் துறைமுகத் தாக்குதல் மூலம் நம் திட்டம் குலைந்ததைக் காரணமாகச் சொல்லிவிடலாம். ஆனால் 1939-ம் ஆண்டு முதலே இந்தியாவில் நேரான முறையில் யுத்த முஸ்தீபு தொடங்கியிருந்தால் பூரணப் பயிற்சியுடனும் ஆயுதங்களுடனும் பல இந்திய சேனைகளைப் பர்மாவுக்கு அனுப்பி ஜப்பானியரை எதிர்த்திருக்க முடியாதா? சந்தர்ப்பத்துக்குத் தக்கவாறு நாம் இந்தியாவுக்கு வழிகாட்டிச் செல்லவில்லை. இத்தவறில் சம்பந்தப்பட்ட தலைவர்கள் தற்போது தேவைப்படும் நிலைமையை உண்டுபண்ண முடியாது. சரியான பேர்வழிகளைக் கண்டு பிடிக்கவேண்டும். முன் போல சம்பிரதாயங்களைப் பெரிதாகக் கொண்ட கண்டிப்பான அதிகார தோரணை இந்தச் சமயத்துக்கு ஏற்றதல்ல. மும்முரமானதாயுள்ள அரசியலில் இந்திய மந்திரிகளே முன்னணியில் இருக்கவேண்டும். இத்துறையில் நாம் அவர்கட்கு உதவ வேண்டும். இதுவே நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய சரியான நடவடிக்கை.

### ஷஸ்டருக்கு ஆதரவு

காமன்ஸ் சபை மெம்பரான ஸர் ஜான் வார்ட்லா மில்னி 'டைம்ஸ்' பத்திரிகைக்கு எழுதியுள்ள கடிதத்தில், ஸர் ஷஸ்டரின் யோசனையை ஆதரித்திருக்கிறார். பல் வேறு வகுப்புகளிலிருந்தும் பலரைப் பொறுக்கி யெடுத்து இந்திய சர்க்காரை ஏற்படுத்தி எல்லா இலாகாக்களையும் ஒப்படைக்க வேண்டுமென்றும், ராணுவத்தைப் பற்றிய அதிகாரம் யுத்தகாலம் வரைச் சேனாதிபதியிடமே இருக்க வேண்டுமென்றும், ஏற்கனவே இந்தியா பேரால் கையெழுத்திடப்பட்டுள்ள ஒப்பந்தங்களுக்கான பொறுப்புகள் அனைத்தையும் இந்திய சர்க்கார் ஏற்க வேண்டுமென்றும், இவ்வாறு செய்வதால் பிரிட்டிஷார் தங்கள் அந்தரங்க சுத்தியை உலகுக்கு நிரூபித்தவர்களாவார்கள் என்றும், இதுவே இந்திய நிலைமையைச் சமாளிக்க நேரான வழியென்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.







### ஜெயப்பூருக்கு அரசியல் சீர்திருத்தம்

ஜெயப்பூர் சமஸ்தானத்துக்கு அரசியல் சீர்திருத்தம் வழங்கும் விஷயத்தைப் பரிசீலனை செய்யத் தனிக் கமிட்டியொன்று நியமிக்க சர்க்கார் முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

### பாரதி இலவச வாசகசாலைப் புத்தகாலய சங்கம், நாட்டரசன்கோட்டை

இச்சங்கத்தின் மாதாந்த சொற்பொழிவுக் கூட்டம் 14-10-42 மாலை 6 மணிக்கு திரு. சேவு. சித. ஆவி. ஆவிச்சி செட்டியார் தலைமையில் நடைபெற்றது. பண்டிதர் திரு. தா. முருகேச பிள்ளை "சைவ சமயப் பெருமை" என்பதுபற்றி சொற்பொழிவாற்றினர்.

### இந்தியப் பிண்ணாக்கு

இந்தியாவில் வருடந்தோறும் சுமார் 14½ லட்சம் டன் பிண்ணாக்கு தயாராகிறது.

### ஸர் ஷண்முகத்திற்கு ஆயுள் காலப் பென்ஷன்

கொச்சி திவானாயிருந்த ஸர் ஆர். கே. ஷண்முகம் செட்டியாருக்கு ஆயுள் காலம் வரை மாதம் 300 ரூபா பென்ஷன் கொடுக்கக் கொச்சி மகாராஜா அனுமதியளித்திருக்கிறார்.

### 7½ லட்ச ரூபா ஸர்டிபிகட்டுகள் களவு

லாகூரில் ஒரு ஹிந்து லேவாதேவிக்காரர் வீட்டிலிருந்து 7½ லட்ச ரூபா மதிப்புள்ள பாங்கி ஸர்டிபிகட்டுகளும் 55,00 ரூபா மதிப்புள்ள கான்வி நோட்டுகளும் களவு போயிருப்பதாகப் போலீஸில் புகார் செய்யப்பட்டிருக்கிறது.

### ஹெஸ் மனைவியின் ஆவல்

பிரிட்டனில் பாதுகாப்பிலிருக்கும் ருடால்ப் ஹெஸ்ஸின் மனைவி, தமது கணவருடன் சேர விரும்புவதாகக் காமன்ஸ் சபையில் தெரிவிக்கப்பட்டது.

### எதிரியால் சேதம்

பிரிட்டன் மீது நடந்த எதிரி விமானத் தாக்குதல் காரணமாக ஐந்து வீடுகளுக்கு ஒன்று வீதம் அழிக்கப்பட்டோ சேத முற்றோ போயிருக்கிறதாம். 44,000 வீவில் பிரஜைகளுக்கு மேல் கொல்லப்பட்டனர். 50,000 பேர்கட்கு மேல் காயமுற்றனர்.

### காப்பி உற்பத்தி

உலக உற்பத்தியில் 69 சதமான அளவுக் காப்பி பிரேஸிலில் உற்பத்தியாகிறது.

## கழுதை ஊர்வல வழக்கு

★

### இருவருக்குத் தண்டனை: கழுதைகள் விடுதலை

செப்டம்பர் 20உ புது டில்லியில் கழுதைகள் ஊர்வலம் ஒன்று நடைபெற்றது. மாக்ஸ்வெல் என்ற பெயரை எழுதி மார்பில் கட்டிக் கொண்டு சிவகுமார் என்பவர் 11 கழுதைகளை ஓட்டிச் சென்றார். அவற்றிற்குத் தொப்பிகள் போடப்பட்டிருந்தன. ஒவ்வொரு கழுதையின் கழுத்திலும் கட்டப்பட்டிருந்த கட்டையில் நிர்வாக சபை அங்கத்தினர் ஒருவரின் பெயர் எழுதப்பட்டிருந்தது. இந்த ஊர்வலத்தோடு சுமார் 250 பேர் சென்றனர். போலீஸார் ஊர்வலத்தைத் தடுத்து ஸ்ரீ சிவகுமாரையும் மற்றொருவரையும் கைது செய்தனர். மற்றவர்கள் கலைந்து போயினர். கழுதைகளும் போலீசாரால் கைப்பற்றப்பட்டன. அக்டோபர் 15உ இந்த வழக்கு டில்லி ஜில்லா மாஜிஸ்திரேட் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டது. கழுதைகளும் தொப்பி, கட்டைகளுடன் கோர்ட்டுக்குக் கொண்டு வரப்பட்டன. நிர்வாக சபை அங்கத்தினரை அவமதிப்பதற்காகத் தமது கழுதைகள் கொண்டு போகப்பட்ட விஷயம் தமக்குத் தெரியாதென்று அவற்றின் சொந்தக்காரர் சொன்னதின் மேல் அவை அவரிடம் திருப்பிக் கொடுக்கப்பட்டன. எதிரிகள் இருவருக்கும் தலா 6 மாதக் கடுங்காவல் விதிக்கப்பட்டது. ——

### அஸம்பிளி உபதலைவர் கைது

ஒரிஸ்ஸா அஸம்பிளி உபதலைவர் ஸ்ரீ நந்தி கிஷோர்தாஸ் பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டிருக்கிறார்.

### தலைமை ஆசிரியர் கைது

ஜோர்ஹாட் ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் ஸ்ரீ கோஜ்ராம சூடியா இன்னும் 11 பேர்களுடன் சேர்ந்து போலீஸ் ஸ்டேஷனைத் தாக்க முயன்றதற்காகக் கைது செய்யப்பட்டிருக்கின்றார்.

## "யுத்தம் முடிந்ததும் சுதந்திரம் பெறுவது நிச்சயம்"

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஜப்பான் இந்தியாமீது படையெடுக்கும் விஷயத்தில் பிரிட்டிஷார் கவலையற்றிருக்கிறார்கள். அது அபாயகரமானதும் முட்டாள்தனமானதுமாகும். இடைக்காலத்தை, மத்தியில் தேசீய சர்க்காரை அமைப்பதிலும், தேசத்தை—ஒவ்வொரு மாகாணத்தையும், ஜில்லாவையும், கிராமத்தையும் விரோதியை எதிர்த்து நிற்கும்படி பயிற்றுவிப்பதிலும் செலவிட வேண்டும்.

### தலைவர் கருத்து

தலைமை வகித்த பெரிய பாதிரியார் பேசும்போது, உண்மையான தேசீய ஒற்றுமையை அடைவதில் இந்தியாவுக்கு உதவுவதே தாம் இந்தியாவுக்குச் செய்யக்கூடிய பேருதவியென்றும், பலதிறப்பட்ட வகுப்புகளிருப்பினும் எல்லோரும் ஒரே வகுப்பினர், ஒரே தேசத்தினர்தா னென்றும் குறிப்பிட்டார்.

——

### இந்தியாவில் ரப்பர் உற்பத்தி

இந்தியாவில் ரப்பர் உற்பத்தியை அதிகரிப்பதற்காக ஒரு ரப்பர் உற்பத்தி போர்டு அமைக்கப்படவிருக்கிறது. இதற்கு ஸர் ஸி. பி. ராமசாமி ஐயர் தலைவராக இருப்பாராம். இந்தியாவில் கிடைக்கும் ரப்பரில் 76 சதமானம் திருவிதாங்கூரில் இருந்தே கிடைக்கிறது.



Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA)

